“OBEISANCE TO THEE! O THOU, MIGHTY WITH MULTIPLE MIGHT,”

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God that sublime belief that seeing evil I yet have faith.”*

*“Seek Truth wherever you can find it,” But, “Make your choice and stick to it till you reach the End.*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

“HITCH YOUR WAGON TO A STAR.” “TO THINE OWN SELF BE TRUE.”




*அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.*] [God is Love : Knowledge is Power : *Aum*

**“New Series”** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **“Approved”**

புத்தகம். **24.**] நள௵ மார்ச்சு௴, **1917**௵ பங்குனி௴ [சஞ்சிகை **12.**

## Business “Terms”:

*N.B.*—To avoid all possibility of misapprehension, we *reiterate* our “terms” (approved by our constituents and by Government) which, from the beginning, are :—

1. Cash or Remittance with Order : Rs. 5 per Vol.; or,
2. *One month's credit at the arrears rate* : Rs. 6 per Vol.
3. Arrears to be cleared on rendering of *a/cs.* or by V.P.P.
4. All Indents registered for School Edition only and to begin with the current volume (corresponding with Tamil or Official year, April-March).
5. Subscriptions registered to continue from Vol. to Vol. and not to be discontinued †in the middle of a Vol.
6. No popular edition issued owing to scarcity of paper.
7. Monthly parts (spare or sample) 8 (eight) annas each.

## General Notice.

☞ Owing to rarity of credit and scarcity of paper, we beg to make it clear and give notice to all that—

- i. the *terms* offered are for regular subscribers only ;
- ii. no exception to these rules can be made or recognised;
- iii. short credit allowed should not be misused ;
- iv. unpaid accounts are subject to “fluctuations” and overcharges ;
- v. all arrears should be fully paid *within* three months (*time being an important factor*) ;
- vi. every outstanding account will be charged *One Rupee Extra* per Vol. or any part thereof for every notice or Reminder sent after this period;
- vii. all subscribers are *ipso facto* bound to observe the rules.

(*By Order of the Managing Committee.*)

THE MANAGING AGENTS, “VIVEKACHINTAMANI,”

*Novr.* 1916.] *Lalitalaya*, 19, *Adam Street*, *Mylapore.*

☞ *Calculations made are based on the principle of one copy for each school which should be strictly adhered to.*

†Notice of discontinuance to have effect must be given in time in writing before a New Volume begins in April and after all the arrears due to the end of the current Volume have been paid and account settled.

*N.B.*—Due care is taken in addressing and personally handing copies to the Post Office at Brodies' Road and there the publishers' responsibility ceases. Evidence of posting is preserved and can be made available for enquiries. The publishers do not undertake to replace missing copies but will endeavour to supply spare copies, when available, on payment, if applied for within 30 days after the 15th of each month for which such copies are due.

Copies lost in transit, if promptly brought to notice, will be referred to the Postmaster-General direct who has written to say “that every effort will be made to trace” them. “If you should have further cause for complaint of the loss or delay of articles, similarly posted or addressed” continues the same high authority, “I shall be glad if you will let me know without delay, giving me the fullest particulars possible.”

## "OBEISANCE TO THEE! O THOU, MIGHTY WITH MULTIPLE MIGHT, REDEEMER THOU! REPELLER OF THE ENEMY'S HOSTS!"

### HAIL MOTHER!

Sweet Thy water, Sweet Thy fruits.
Cool blows the scented south wind.
Green waves thy corn.
Hail Mother! (Vande Mataram)

Land of the glad white, moon-lit nights.
Land of trees with flowers in bloom.
Land of Smiles, land of voices sweet,
Giver of joy, giver of desire.
Vande Mataram!

Seventy million* voices resounding,
Twice seventy million arms in resolve uplifting
Dare any call Thee weak?
Obeisance to Thee! O Thou, mighty with multiple might,
Redeemer Thou, Repeller of the Enemy's hosts.
Vande Mataram!

In Thee all Knowledge, Religion Thou,
Thou, the Heart, Thou, the seat of life,
The "breath of life in the flesh"
Vande Mataram!

O Mother, the strength of this arm, Thou,
Thou, the Devotion in the heart,
Thine, the Image consecrate,
From temple to temple.
Vande Mataram!

The wielder of ten arms, Durga, Thou,
Thou, the Goddess of wealth, bowered in the [lotus,
Thou, the Muse dispensing Wisdom.
Obeisance to Thee!
Vande Mataram!

Salutations to Thee! Holder of Wealth, peerless
With thy limpid water and luscious fruit,
Mother! Hail, Mother!
Verdant, Artless, Sweet—Smiling,
Radiant, Sustaining, Nourishing,
Mother! Hail, Mother!
Vande Mataram!

அருந்திறலுடையாய் அருளினை போற்றி!

### தாயே வந்தனம்!

I

இனிய நீர்ப்பெருக்கினை, இன்கனி வளத்தினை,
தனிநறு மலயத் தண்காற் சிறப்பினை,
பைங்கிறப் பழனம் பரவிய வடிவினை!
போற்றிதாய்! (வந்தே மாதரம்)

II

வெண்ணிலாக்கதிர் மகிழ்விரித்திடு மிரவினை!
மலர்மணிப் பூத்திகழ் மரன்பல செறிந்தனை!
குருநகையின் சொலார்† குலவிய மாண்பினை!
நல்குவை யின்பம், வரம்பல நல்குவை!
வந்தே மாதரம்!

III

முப்பது கோடிவாய்* (கின்னிசை) முழங்கவும்
அறுபது கோடி தோளு யர்ந் துணக்காற்றவும்
"திறனிலாள்" என்றுனை யாவனே செப்புவன்!
அருந்திறலுடையாய், அருளினை, † போற்றி!
பொருந்தலர் படைபுறத் தொழித்திடும் பொற்பினை,
வந்தே மாதரம்!

IV

நீயே வித்தை, நீயே தருமம், †
நீயே யிதயம், நீயே மருமம், †
உடலகத்திருக்கு முயிருமன்னீயே!
வந்தே மாதரம்!

V

தடந்தோ ளகலாச்சத்தி நீ! யம்மே,
சித்தநீங்கா துறு பத்தியு நீயே
ஆலயந்தோறு மணிபெற விளங்கும்
தெய்விக வடிவமுந் தேவியிங் குனதே!
வந்தே மாதரம்!

VI

ஒரு பது படைகொளு முமைய வணியே!
கமல மெல்லிதழ்களிற் களித்திடுங் கமலை நீ!
வித்தை நன்கருளும் வெண்மலர்த் தேவி நீ!
வந்தே மாதரம்!

VII

போற்றி! வான் செல்வீ, புரையிலை † கிகரிலை,
இனிய நீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை,
சாமள கிறத்தினை † சரளமாங்† தகையினை,
இனியபுன் முறுவலாய்! இலங்குநல் லணியினை,
தரித்தெமைக்† காப்பாய்! தாயே, போற்றி!
வந்தே மாதரம்!

---

* When Mr. Bankim Chandra Chaterjee wrote this son g the population of Bengal was only 70 millions. In the Tamil rendering, this has been changed into "300 millions" so that the song might apply to our *Bharatmata* (Mother-India) instead of merely a single Province.

* பெங்காளி பாஷையிலே 7-கோடி என்றே கூறியிருக்கின்றது. ஆனால் அது பெங்காள மாகாணத்தை மட்டிலுமே குறிப்பிட்டது. 30-கோடி இந்தியா முழுமையின் ஜனத்தொகை.

† இக்குறிப்பிட்ட இடங்களில் ஆங்கில மொழிபெயர்ப்பானது சிறிது மாறுபட்ட தோற்றங் கொண்டிருப்பதால் பெங்காளிச் சொற்களைத் தழுவியே தமிழ் எழுதப்பட்டிருக்கின்றது.

"No good work is ever lost." "My best wishes for the success of your publication"—*Sir Harold Stuart, K. C. V. O.*

புஸ்தகம்-24.] [சஞ்சிகை-12.

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நள ௵ பங்குனி ௴ } விவேக  சிந்தாமணி { February-March. 1917.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சர்யத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சர்ய மோதா னவர்க்கு."

## THE DEFENCE OF INDIA FORCES.

## இந்தியா பாதுகாப்புச் சைனியங்கள்.

கனம் பொருந்திய இராஜப்பிரதிநிதியவர்கள் இந்தியா சட்டநிரூபணசபைமுன் பேசியதிலிருந்து இந்தியா பாதுகாப்புக்காகப் புதிதாய சைனியங்களை சேர்க்க ஏற்பாடு செய்யப்போவதாகவும் அதற்காக இந்தியாவிலுள்ள ஐரோப்பியர்கள் எல்லாரும் 18-வயதுமுதல் 40-வயது வரையில் உள்ளவர்களாயிருக்குமளவில் அவரவர்கள் பேர்களை ரிஜிஸ்தர் செய்துகொள்ளவேண்டுமென்று உத்தரவு பிறப்பித்திருக்கிறார்களென்றும் தெரியவந்தது. இதன் கருத்து என்னவென்றால், புதிதாய இந்தியா பாதுகாப்புக்காகச் சைனியங்களை சேர்க்க வேண்டியதைப்பற்றி சட்டம் உண்டுபண்ணப் போவதாகவும் அந்தச்சட்டம் செய்துமுடித்து ஊர்ஜிதத்துக்கு வரும்போது ஐரோப்பியர்களெல்லாரும் இராணுவத்தில் சேர்த் தயாராயிருப்பார்களென்றும் சொன்னார். அப்படியே இந்தியர்களில் இராணுவத்தில் சேரவிரும்புகிறவர்களையும் இந்தியர்கள் சேர்ந்த படைகளாகச் சேர்த்து யுத்தத்துக்கு வேண்டிய தர்பீது செய்ய ஏற்பாடு செய்யப்படுமென்றும் சொன்னார். இந்தியர்கள் தொகை ஏராளமாயிருப்பதால் அவர்களை நிர்ப்பந்தித்து இராணுவத்தில் சேரச்செய்வது அசாத்தியமாகவிருக்குமென்றும் இஷ்டப்பட்டு இராணுவத்தில் சேருவதற்கு முன்வருகிறவர்களைமட்டும் சேர்த்துப் பழக்கப்படுமென்றும் சொன்னார். இந்த சைனியங்களெல்லாம் இந்தியாவின் எல்லைக்குள் உபயோகிக்கப்படுவதற்காகவே சேர்க்கப்படுகின்றன. ஆனாலும் அவசரம் நேர்ந்தால் இந்தியாவுக்கு வெளியில் யுத்தகளத்துக்கும் அனுப்பப்படுவார்களாதலால் அதற்கும் தயாராகவிருக்கவேண்டும். இதுவரையில் இந்தியர்களை வாலண்டியர்களாகச் சேர்ப்பதில்லையென்றிருந்தார்கள். இது இந்தியாவுக்கு ஒரு பெருங்குறையாகவிருந்தது. ஏனெனில், இந்தியர்கள் தங்கள் சொந்ததேசத்தைக் காத்துக்கொள்ள அநர்கர்களாயிருந்தார்கள். இப்பொழுது அக்குறைதீர அவர்கள் இராணுவத்தில் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். ஆனால் இது யுத்தகாலம் வரையில்தான். ஐரோப்பாவில் யுத்தம்இன்னும் வெகு மும்முரமாகவே நடந்துவருகிறது. ஜெர்மானியா சமாதானப் பேச்சு விட்டுப் பார்த்ததெல்லாம் வீண் பசப்பு வார்த்தையென்கிறார்கள்.

யுத்தமுகத்தில் சேதமான சைனியங்களுக்கு பதிலாகப் புதிய சைனியங்கள் அனுப்பிக்கொண்டேயிருக்கவேண்டியிருக்கிறது. ஆள் மாகாணம் போதுமானதாயில்லை. ஆகையால் இந்தியாவில் ஏராளமான சைனியங்கள் சேர்க்க ஆள் மாகாணம் நிறைந்திருப்பதால் இத்தேசத்தில் புதிதாய் இந்தியாவின் பாதுகாப்புக்காகவென்று சைனியங்கள் சேர்க்க யத்தனித்து வருவது உசிதமே. கனம். ஸர். பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் அவர்கள் நாமக்கல்லில் இதைப்பற்றிப் பேசியபொழுது அவருக்கு வயது 18-க்குமேல் 40-க்கு உள்ளாக இல்லையேயென்று வருந்துவதாகச் சொன்னார். இருந்தால் அவர் தேசப் பாதுகாப்புக்காகச் சேனையில் சேர்ந்து இந்தியாவுக்காக யுத்தகளத்தில் பிராணனைவிட்டு வீரசொர்க்கம் அடையத் தயாராயிருப்பார். வயதானவர்களெல்லாரும் இவ்வளவு உற்சாகமாகப் பேசியபொழுது பாலியமும் தேகபலமுமுள்ளவர்கள் எவ்வளவு ஆவலாக இருக்கமாட்டார்கள்.

## THE NEW SUBMARINISM.

## ஜெர்மன் சண்டை புதுமோஸ்தர்.

ஜெர்மானியர் பசப்புவார்த்தை காட்டி சமாதானப் பேச்சு விட்டதெல்லாம் எதிரிகளை ஏமாற்றி வெற்றி பெறலாமென்று செய்த தந்திரமென்று தெரிகிறது. ஏனெனில் சமாதானப் பேச்சு விட்டுக்கொண்டிருக்கையிலேயே இரகஸியத்தில் வெற்றி பெறுவதற்கான பெருமுயற்சியொன்று செய்யத் தயாரித்து வந்தார்கள். அது என்னவெனில்: சமுத்திரத்தில் எதிரிகள் நாட்டுக்குப் போக்குவரத்து இல்லாதபடி அடிக்க, சண்டைக்காரர்கள் கப்பலாக விருந்தாலும்சரி, சண்டையில் சேராதவர்கள் கப்பலாயிருந்தாலும்சரி, அவர்கள் குறிப்பிட்ட எல்லைக்குள் எந்தக் கப்பலாவது தலைகாட்டினால் அதை கடலின்கீழ் பாய்ந்து தாக்கும் 'டார்பீடோ' யந்திரமமைத்த படகுகளால் தாக்கியுடைத்து நாசம் செய்துவிடுவதாகத் தீர்மானித்து ஜனவரிமீ 31உ முதல் இந்தப் புதுமோஸ்தர் சண்டை ஊர்ஜிதத்துக்கு வருமென்று வெளியிட்டுவிட்டார்கள். வெளியிட்டபடியே எதிரிகள் கப்பல்கள் பலவற்றோடு அமெரிக்கா யூனைடெட் ஸ்டேட்ஸ் கப்பல்கள் சிலவற்றையும் உடைத்து தகர்த்துவிட்டார்கள். இதனால் அமெரிக்கா ஐக்கியமாகாணத்து கவர்ன்மெண்டாருக்கும் ஜெர்மனியாருக்கும் பேச்சுவார்த்தையில்லாதபடி மனஸ்தாபம் முற்றிவிட்டது. அந்தந்த தேசங்களிலுள்ள தூதர்கள் திரும்பிவிட்டார்கள். யுத்தம் நடப்பது சித்தம்போலிருக்கிறது. ஆனால் இன்னும் யுத்தம் ஆரம்பித்துவிட்டதாகப் பயிரங்கப்படுத்தப் பெறவில்லை. அதற்குள் சமாதானமாய் இதை ஒருவிதம் தீர்த்துக்கொள்ளப் பார்க்கிறார்கள். ஜெர்மானியர்க்கு கைசளைக்கும் காலமாயிருப்பதால் எப்படியாவது சீக்கிரத்தில் வெற்றி பெறவேண்டுமென்று பார்க்கிறார்கள். ஆங்கிலேய கப்பற் சேனைகள் ஜெர்மனிக்கு போக்குவரத்தில்லாதபடி மறியல் யுத்தம் செய்துவந்ததில் அத்தேசத்தாருக்கு சாப்பாட்டுக்குப் போதாமல் அவர்கள் பட்டினிகிடக்கும்படியான நிலைமைக்கு வந்துகொண்டிருக்கிறார்கள். ஜனங்கள் பட்டினிகிடக்க நேரிட்டால உற்சாகத்தோடு போர்செய்யமுடியாது. தேசத்துக்குள் கலகமுண்டாகும். இதைத் தடுக்கவென்று ஜெர்மனியார் ஆங்கிலேயரையும் அப்படியே மறியல் யுத்தம் செய்து அவர்கள் கப்பற்படைகளைக் கலக்கி அவர்கள் கொட்டத்தை அடக்கப்பார்க்கிறார்கள். எதிர் நின்று சண்டைபோட ஜெர்மானியருக்கு கப்பற் சைனியபலம் போதாதாதலால், தண்ணீரில் மூழ்கிக் கப்பலைத் தாக்கி யுடைக்கும் படகுகளை ஆயிரக்கணக்காய்ச் செய்து முடித்துக்கொண்டு தனியாக வரும் கப்பல்களை யெல்லாம் தண்ணீருக்குள்ளாகச் சென்று தாக்கியுடைத்துச் சேதம் செய்து வருகிறார்கள். பிப்ரவரிமீ 14உக்குள் சேதமான கப்பல்களின் தொகை அதிகமாகவேயிருக்கிறது. இந்த விகிதம் கப்பற்சேதம் செய்துவந்தால் இது எவ்வளவு காலத்துக்கு நடக்குமோ யோசனைதான்! ஆனால் பிரிடிஷார் அஞ்சாத நெஞ்சராய் பகைவர்கள் செய் முயற்சிக்கு எதிர் முயற்சிசெய்து புதிய கப்பல்களைச்செய்து கப்பற்படையை விர்த்திசெய்து வருகிறார்கள். வியாபாரக்கப்பல்களையெல்லாம் சண்டைக்கு முஸ்தீபாக ஆயுதம் அமைத்து வருகிறார்கள். இந்தப் போராட்டம் எப்படி முடியுமோ அது இன்னும் இரண்டொரு மாசகாலத்தில் தெரியலாம்போலும்.

## THE WAR EXPENDITURE.

### யுத்தச் செலவு.

இந்தப் பாரத யுத்தம் துவங்கின முதல் வருஷத்தில் பிரிடிஷாருக்கு தினப்படி 10-லக்ஷம பவுன் செலவு நேர்ந்துவந்தது. இரண்டாவது வருஷம் துவங்குமுன் தினம் ஒன்றுக்கு 35-லக்ஷம் பவுன் செலவு பிடித்தது. இன்னும் சிலமாதங்களுக்கெல்லாம் இந்தச் செலவு தினம் ஒன்றுக்கு 50-லக்ஷம் பவுன் அல்லது அரைக்கோடி பவுன் ஆக அதிகரித்தது. இப்பொழுது அதுவும் போதாமல் சென்ற இரண்டு மாதங்களாக தினம் ஒன்றுக்கு 57-லக்ஷம் பவுன் செலவாகி வருகிறதென்று அரசிறை மந்திரி தெரிவித்திருக்கிறார். இப்பொழுது ப்ரான்ஸ் தேசத்தாருக்கு தினம் 40-லக்ஷம் பவுன் செலவாகி வருகிறது. ஆங்கிலேயர், பிரான்ஸுக்காரர் இவ்விருவர் செலவு மட்டும் 1915ஞ்ல செப்டெம்பர்மீ வருஷத்துக்கு 215-கோடி பவுன் விகிதமாயிற்று. அது இப்பொழுது 355 கோடி விகிதமாயிருக்கிறது. அதாவது 100-க்கு 70 விகிதம் அதிகரித்திருக்கிறது. இந்த விகிதம்போல் கணக்குப் பாத்தால் அடுத்த செப்டெம்பர்மீ 600 கோடி பவுன்விகிதமாகப் பெருகிவிடும் என்கிறார்கள். யுத்தம் ஆரம்பித்தது முதல் ஜெர்மனியின் யுத்தச்செலவுமட்டும் 3 ஆயிரம்கோடியே 500 லக்ஷம் பவுன் ஆயிருக்கிறதென்று கணக்கிட்டிருக்கிறார்கள். இந்த யுத்தத்தில் சம்பந்தப்பட்ட இன்னுமுள்ள இதர தேசத்தார்கள் செலவை யெல்லாம் கணக்கிட்டுப் பார்த்தால் எவ்வளவு ஆகுமென்று சிந்திக்க மனம் கூசுகிறது.

## THE USE OF TOYS IN THE EDUCATION OF CHILDREN—III.

### குழந்தைகளும் விளையாட்டுக் கருவிகளும்.—III.

(மாசிமீ சஞ்சிகையின் 331-ம்பக்கத் தொடர்ச்சி.)

குழந்தைகள் பொம்மைகளையும் விளையாட்டுக் கருவிகளையும் கண்டு அவைகள் தங்களுக்கு வேண்டுமென்று ஆசைப்படவும், கிடைத்தால்வைத்துக் கொண்டாடவும்கற்றுகொண்ட பிறகு அப்பொம்மைகளையும் விளையாட்டுக் கருவிகளையும் தாங்களே வைத்துக்கொண்டு தனியாக அனுபவிக்க விரும்பாது தங்களையொத்த சிறு குழந்தைகளோடுகூட அவைகளை வைத்துக்கொண்டு விளையாட விரும்புகின்றன. அப்பொழுது தங்களதென்று சொந்தம் பாராட்டிக்கொண்டாடிய விளையாட்டுக் கருவிகளைத் தங்களோடு விளையாடும் மற்றக் குழந்தைகளுக்கும் கொடுக்கக் கற்றுக்கொள்கின்றன. இதனால் அனுதாப சிந்தையுண்டாகிறது; அனுதாபசிந்தை வளரவே, பிறகு தங்களுடைய சிறுதங்கை தம்பிகளுக்குத் தங்கள் பொம்மைகளைக் கொடுக்கவேண்டுமென்கிற எண்ணம் உதிக்கிறது. இது மூலமாக தயாளத்துவம் உதிக்கக்காரணமாகிறது. இப்படியாக விளையாட்டுக்கருவிகள் குழந்தைகள் மனதில் அனேக நல்லெண்ணங்களும் கருத்துக்களும் உதிக்கக் காரணமாகின்றன. விளையாட்டுக் கருவிகளில்லாவிட்டால் இந்த நல்ல எண்ணங்கள் கருத்துகள் எல்லாம் உதிப்பதற்கு மூலமாயிருக்கும் காரணம் இல்லாமற் போய் விடுகிறது. விளையாட்டுக் கருவிகளினால் மனதும் சிந்தையும் சரியாக விர்த்தியடைந்து லோகசுபாவத்தையும் மாதிரியையும் அனுபவித்தறிந்துகொள்ள ஆஸ்பதமான ஸ்திதியையடைகின்றன. ஆகையால் நாம் விளையாட்டுக்

கருவிகளையும் பொம்மைகளையும் அலக்ஷியம் செய்யாமல் நமது குழந்தைகள் விர்த்தியடைய மிகவும் உபயோகமான கருவிகளாக மதித்து தெய்விகமாக அவைகளைப் பாராட்டவேண்டும். குழந்தை மனம் நன்னடத்தையின்னதென்று ஊகித்தறியச் சக்திபெறுமுன், விளையாட்டுக் கருவிகளும் பொம்மைகளும் அம்மனதில் நல்லெண்ணங்கள் உதிக்கும்படிச் செய்கின்றன. குழந்தைகள் விளையாடும்பொழுது பொம்மைகளைத் தாலாட்டிச் சீராட்டுவதையும், அது அழுவதுபோல் பாவித்து சமாதானப்படுத்துவதையும், பொம்மைக்குக்காயலாவென்று சிகிச்சைசெய்வதையும், இது போன்ற நடவடிக்கைகளையும் அலக்ஷியம் செய்வது பிசகு. குழந்தைகளுக்கு அத்தருணங்களில் உண்மையான நல்லெண்ணங்கள் உதித்து மனதில் பதியும்படியான நிலையிலிருக்கின்றன. அச்சமயத்தில் நாம் யோசனையின்றி அலக்ஷியம் காட்டினால் அம்மேலான எண்ணங்கள் மனதில் பதிந்து வேரூன்றுவதற்குப் பங்கமுண்டாகும்.

புஸ்தகங்களைக்கொண்டு குழந்தைகளுக்குப் போதிக்க முடியாதவைகளை ஒழுங்கோடு கூடிய வேடிக்கை விளையாட்டுக்களால் மிக நன்றாகவும் இலகுவாகவும் போதிக்கலாம். இதனாலேயே எந்தெந்த தேசத்தில் குழந்தைகளுக்கு விளையாட்டுக்கருவிகளும் பொம்மைகளும் அதிகமாகக் கொடுத்துதவிச் சீராய் வளர்த்து வருகிறார்களோ அந்தத்தேசத்தார் விசேஷமாக ஏகத்துவம், (அதாவது, குருட்டுத்தனமாய்ப் பிறரைப்பார்த்துப் பின்தொடாமல், தாங்களாக சொந்த யோசனைசெய்து சுயபுத்தியைக்கொண்டு நடக்குந்தன்மை)* எதிலும் மிகமேன்மையான எண்ணங்களைத திரட்டி உருவகப்படுத்திக்கொண்டு அதற்கொப்ப நடக்குந்தன்மை†, சௌரியம்‡முதலிய மேலான குணங்களில் சிறந்து விளங்குகிறவர்களாக விருக்கிறார்கள். இந்த உண்மையை ப்ரோபேல் என்பவர் கண்டு பிடித்து இந்த சூக்ஷ்ம வழியை யனுசரித்துக் குழந்தைகளைப் படிப்பித்துப் பழக்கவேண்டுமென்று, வேடிக்கை விளையாட்டுகளையெல்லாம் நன்றாக கவனித்துத் தீர ஆலோசித்து அவைகளை வித்தியாவிஷயத்துக்கு அனுகூலமாக, அதாவது குழந்தைகள் நாலாவிதத்திலும் விர்த்தியடைந்து வளருவதற்கு ஒத்தாசையாக விருக்கும்படி ஒழுங்குபடுத்தி முறைக்குக் கொண்டு வந்தார். இப்படி அவர் நூதனமான போதனை முறை கண்டுபிடித்ததில் அவர் உபயோகப்படுத்தின வழி வகைகள் ஆதிகாலந்தொட்டு புத்திசாலிகளான தாய்மார் தங்கள் குழந்தைகளுக்கு விளையாட்டுக்காட்ட உபயோகித்து வந்த பந்து, கல், குச்சி, பாட்டு, விளையாட்டு, கஸரத் முதலியவைகளேயன்றி வேறல்ல. அப்படியானால் இவைகளை அவர் உபயோகித்ததில் விசேஷமென்ன வந்ததென்று கேட்டாலோ, அவர் வேடிக்கை விளையாட்டுகளை உபயோகித்ததில் குழந்தைகள் உத்தேசமின்றி, ஒழுங்கற்று, நினைத்தபடி விளையாடுவதை ஒழித்து, ஒவ்வொரு விளையாட்டையும் ஒழுங்காகவும், கருத்தாகவும், இடையில அதை விட்டு வேறொன்றில் மனம் பற்றாதபடி திருத்தமாகவும் விளையாடும்படி குழந்தைகளுக்கு ஒத்தாசைசெய்து எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்துவதை ஒரு பெரிய காரியமாகக்கொண்டு நிறைவேற்றத்துவக்கினார். விளையாட்டுக் கருவிகளை நினைத்தபடி உபயோகித்து நினைத்தபடி யெறிந்துவிட்டுப்போவது கூடாதென்று காட்டித் தடுத்தார். விளையாடுவதிலும் குழந்தைகள் மனதை ஒருவழிப்படுத்தி அந்தவழியில் சரியாகச் செல்வதால் விர்த்திக்கிடமுண்டாகும்படி அவ்விளையாட்டுகளையெல்லாம் ஒழுங்குபடுத்தினார். இப்படி ஒழுங்குபடுத்திய

* Individuality. † Idealism. ‡ Heroism.

விளையாட்டுகளை 'கிண்டர்கார்டன் விளையாட்டுகள்' என்றும், அவ்விளையாட்டுக்கு வேண்டிய கருவிகளுக்கே 'கிண்டார்கார்டன் கொடைகள்' என்றும் பேர் வழங்கிவருகிறது. நமது தேசத்தில் வழங்கிவரும் விளையாட்டுகள், பாட்டுகள் முதலியவைகளை 'கிண்டர்கார்டன் முறை'க்கு ஏற்கும் வண்ணம் உபயோகிக்கலாமென்று அனேகம் பாட்டுகள் விளையாட்டுகளை அதற்கேற்ப உபயோகிக்கும் விதத்தை யெடுத்து விளக்கிக்காட்டி இவ்விவேகசிந்தாமணியில் பிரசுரித்து வந்திருக்கிறோம். 'கிண்டர்கார்டன்' விளையாட்டுக்கும், சாதாரணமாகக் குழந்தைகள் நம் வீடுகளில் விளையாடுகிற விளையாட்டுக்கும் ஒரு பெரிய வித்தியாசமுண்டு. கிண்டர்கார்டனில் குழந்தைகள் விளையாடும் விளையாட்டு ஒவ்வொன்றும் ஒரு பலனை உத்தேசித்துச் செய்யப்படும். அப்பலன் சித்திக்கும்படி கிண்டர்கார்டன் உபாத்தியாயர் குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்திருந்து அவர்களை நிர்ப்பந்திக்காது ஹிதமாகவே சரியான வழிகாட்டி அந்தவழியிற் செல்ல நடத்திக்கொண்டு போவார்கள். வீட்டில் விளையாடும் விளையாட்டுகளோ மேற்பார்வையற்று அடிக்கடி மாறும் குழந்தைகள் மனபேதத்துக்குள்பட்டும், வீண்காலப்போக்கு, சோம்பித்திரிதல், அற்பசொற்பம் முதலிய குற்றங்களுக்கு இடந்தருவனவாகவு மிருக்கும். இவ்வித குற்றங்களுக்கு இடமுண்டானால் அவ்விளையாட்டு வளர்ச்சிவிர்த்திக்குக் காரணமாகவின்றி ஒழுங்கீனம், தூர்க்குணம் இவைகளுக்கு ஆதாரமாகின்றன. குழந்தைகள் விளையாடும்பொழுது நடுவில் நேரும் இடையூறுகள், வீணெண்ணங்களால் அவ்விளையாட்டின் நோக்கமும் பயனும் கெட்டுப் போகாதபடி காக்க அவர்களுக்குத் தக்கவர்கள் உதவியாயிருந்து வழிகாட்ட வேண்டியது அவசியம். ஆனால் அப்படி வழிகாட்டி நடத்திக்கொண்டு போவதில் அவர்களை நிர்ப்பந்திக்காமல் லாவண்யமாய் நாம் அவர்களை நடத்துவது தெரியாதபடி அவர்களிடத்தில் வெகு மிருதுவாக நடந்துகொள்ளவேண்டும். இப்படியாகக் குழந்தைகளின் வித்யாப்பியாச விஷயத்தில் பொம்மைகளும் விளையாட்டுக் கருவிகளும் மிக அவசியமும் உபயோகமுமானவைகளென்பது ஸ்பஷ்டமாய் விளங்கும். விளையாட்டுக் கருவிகளினாலேயே குழந்தைகளுக்கு குணங்களெல்லாவற்றிலும் மேலான மானுஷிகத்தனம் முதல்முதல் உதிக்கிறது. இதற்கு ஆதாரமாகவிருப்பது அனுதாபம். அனுதாப குணம் பொம்மை விளையாட்டில் தான் குழந்தைகளுக்கு முதல்முதல் உதிக்கிறது. விளையாட்டுபொம்மை யில்லாவிட்டால் அக்குணம் உதிப்பதற்கு அனுகூலமின்றிப் போய்விடும். ஏனென்றால் சிறு குழந்தைகளுக்கு பொம்மை விளையாட்டுக்கருவிகள் மூலமாகவின்றி மற்றப்படி லோகவிஷயங்களைக் கிரகித்துக் கொள்வதற்கான சக்தியில்லாமலிருக்கிறது.

இது சங்கதியை முன்னரேயெடுத்து விளக்கிக்காட்டியிருக்கிறோம். விளையாட்டுக் கருவிகளையுபயோகித்தல் வித்தியாரம்பத்தின் பிரதமபாகமென்னலாம். இதையொட்டி இதற்குமேல் வருவது 'பொருள் பாடம்' ஆகும். 'கிண்டர்கார்டன்' முறையில் இந்தப் 'பொருள் பாடம்' சொல்லல், விளையாட்டுக் கருவிகளையுபயோகித்தலுக்கு அடுத்த இரண்டாவது படியில் வருவதாகச் சொல்லலாம். இதைப்பற்றிப் பின்னால் வேறொரு சஞ்சிகையில் எழுதுவோம்.

C. V. S.

## SOME REFLECTIONS ON THE STATE OF THE COUNTRY.

BY A COUNTRY MAN.

### பஞ்சமும்-பிரபஞ்சமும்

அனுபவசித்தாந்தம்.

M. A. நெல்லையப்பர்

---

இந்த பூலோகம் ஐஸ்வரியம் நிறைந்ததாயிருந்தும் 'ஆறிடும் மேடும் மடுவும் போலாஞ் செல்வம்' என்பதுபோல ஆங்காங்கு தரித்திரமும் குடிகொண்டிருக்கிறது. இதனை இந்தியாவில் நேரில் அறிந்துகொள்ளலாம். வீதிவழிநின்று ஜனங்களின் நடையுடைபாவனைகளைக்கண்டும் அறியலாம். இவ்விதம் முக்கியமாய் நம் இந்தியர்களில் பலர் ஏன் இங்ஙனம் கஷ்டப்படவேண்டும்?

முதலாவது, வேலைசெய்து, அதற்குத் தக்க ஊதியம்-சம்பளம்-கிடையாததாலும் (வேறு மார்க்கமின்றி) அதிர்ப்தி அடைதல்; அற்ப காரியத்தில்கூட ஒற்றுமையாய் இல்லாதிருத்தல்; தன்னயம் பாராட்டுதல்; கைத்தொழில் வியாபாரம் விர்த்தியாகாது மேன்மேலும் கஷ்டமடைதல்; தேசாபிமானம், இரக்கம் இவை குறைந்திருத்தல்; ஊக்கமின்மை இன்னும் இது போன்ற பற்பல காரணமுள.

எந்த விஷயத்திலும் நல்ல எண்ணமுண்டாகுதலும், பிறர் நன்மையை நாடுதலும், பரோபகாரமாயும், பிறர் குற்றத்தை தூறுமலும், வேலைசெய்வதில் சிறிது பாகமேனும் தேச நன்மைக்குப் பாடுபடக் கூடியவராயும் இருத்தல் மிகுந்த நன்மைதரும்.

சிலர் சம்பாதிப்பது கொஞ்சமாயிருந்தபோதிலும்-எண்ணுதும்எண்ணி-ஆகாசக்கோட்டை கட்டுகின்றனர். ஒரு விஷயத்தில் புகுமுன் நீரயோசிப்பதில்லை. ஆரம்பித்த தொழிலை மனோவேகம்போல் விர்த்தியாகவில்லையென்று விட்டுவிட்டு அதிகமான கஷ்டத்துக் குட்படுகின்றனர்.

(1) சுமார் நூற்றுக்குப் பத்துப்பேர் அளவுக்குமிஞ்சிய செல்வத்தால் மகிழ்ந்து வாழ்கின்றனர்.

(2) சுமார் நூற்றுக்கு பதினைந்துபேர் வரவுக்குத் தக்க செலவுசெய்து திருப்தியாயிருக்கின்றனர்.

(3) சுமார் நூற்றுக்கு அறுபதுபேர் செலவுக்குப் போதாமல் தரித்திரத்தோடு வாழ்கின்றனர்.

(4) சுமார் நூற்றுக்கு 15 பேர் இன்னவிதம் என்று எழுதுவதற்கில்லை.

இதற்குக் காரணமென்ன?

நாகரிகம் முன்னேறுக்குகிறது. சாஸ்திர-விசாரணை அனுபவத்துக்குத் தக்கவாறு அதிகப்படுகிறது. மனிதனுடைய சக்தி எத்தன்மையுடையதென்பது விளங்க, அபூர்வமானதையும், ஆச்சரியமானவைகளையும் யுக்தியால் கண்டுபிடிப்பது. இம்மாதிரியெல்லாம் நாகரிகம் முதிர்ச்சியடைந்து வரும் இக்காலத்தில் நமது நாட்டில் தரித்திரம்-பஞ்சம்-பரவிவருவானேன்? நிலத்தின் விலை அதிகப்படுவானேன்? நிலமுள்ளவனுக்கு சுதந்தரம் குறைவானேன்? தொழிலாளிகளும் கஷ்டப்பட்டு ஏன் லாபம்-திருப்தி-அடைவதில்லை. எஜமானன்-செல்வவந்தர்கள்-வணிகர்கள் ஏன் தத்தம் வேலைக்காரர்களை திருப்தி செய்கிறதில்லை?

இப்பரதக் கண்டத்தில் பிறந்தவர்கள் அபாரபுத்தியுடையவர்கள் என்று அயல் நாட்டார் பெருமைப்படுத்துகிறார்கள். சுமார் நூறு வருஷத்திற்குமுன் நிலத்தில் அபரிமிதமான லாபமிருக்க இப்பொழுதுதாழ்வடைவானேன்? எந்த விஷயத்திலும் திடசித்தம்-தைரியம்-இல்லை. ஆரம்பித்த ஒரேதொழிலில் நன்றாய்ப் பாடுபடுவதில்லை. வேலைசெய்யாதவனுக்கு கூலி யார் கொடுப்பார்? ஒருவர் போனவழியே போய், மற்றவர்களைக் கெடுக்கப் பார்த்து தானும் கெடுவதில் என்னபயன்? நன்றாய் ஆலோசனை செய்யவேண்டும். இதுதான் ஒரு மனிதன் செய்யவேண்டிய பெரிய வேலை,

### நவீன நாகரிக ஆராய்ச்சி.

நாகரிகமடைந்த இக்காலத்தில் நவீனமானவை எங்ஙனம் அபிவிர்த்தியாகின்றன வென்பதை ஆராய்வோம். ஒருவன் அபூர்வமாய் ஒன்றைக் கண்டுபிடித்தால், தன்மட்டில் ரகஸ்யமாயிருந்து மற்றிரு தலைமுறைவரை நடந்து கடைசியில் பொது ஜனங்களுக்கு பஹிரங்கமாகி, பலரும் அவ்விதம் செய்துபார்க்க, எல்லோருக்குமே சொந்தமாகி விடுகிறது: அல்லது பயிர்த்தொழில் செய்வோருக்கு பயன் தரத் தக்கதைக் கண்டுபிடித்தால் தக்கபடி முயற்சியெடுத்துக்கொண்டால் நன்மையுண்டாகிறது. அதாவது அபிவிர்த்திக்குப் போதுமான திரவியசகாய மிருக்கவேண்டும் அப்படி அதிகப்படுத்தினால் அளவற்ற ஜனங்களுக்குப் பேருபகாரமாயிருக்கும்.

நம்மவர்களில் அநேகருக்கு, புத்தி தீக்ஷணியமும், நல்லயுக்தியும் இருந்தும், உத்தியோக நிமித்தம் கூட்டுப்பட்டிருக்கிறதை நிராகரித்து வெளிவரமுடியாமல் அப்படியே இருந்து விடுகிறார்கள்.

அயல் நாட்டாரைப்போல் பாவனைசெய்து கொண்டு, மனம்போன போக்கில் நடந்து, 'இப்படிச் செய்யலாமா' வென்று கேட்டால் 'நாகரிகம்' என்று ஒரேவார்த்தையில் அடக்கி விடுகிறார்கள். வெறும் ஆடம்பரத்துக்கு அநேகர் அளவற்ற அரும்பொருளை விரயமாக்குகிறார்கள்.

### யுத்த காலம்.

இப்பொழுதோ யுத்தகாலம். 1916 ஒருவாறாய் அகன்றது. 1917 ஆரம்பமாய் விட்டது. பொதுஜன வாழ்க்கைக்கு இடையூறும் பலத்துக் கொண்டிருக்கிறது. அதிக கஷ்டம் வரும்போது பெருநன்மை உண்டாவதற்கு ஓரடையாளமென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். கடவுள் செயல் எப்படியோ! யுத்தகாரணமாய் விரோதிகளின் சரக்கு விலையேற்றமாகி லட்சக் கணக்கில் லாபத்தைச் சம்பாதித்தவர்களும் உண்டு. அவ்விதமே அதிக கஷ்டத்துக்கே அடைக்கலமாயிருந்து துன்புறுவாரும் இருக்கின்றனர். செல்வம் பெருகியவர்கள், அடிமைபோல் தங்களிடத்தைக் காத்துக் கொண்டிருக்கும் குமாஸ்தாமுதலானவர்களையும், அன்னவஸ்திரத்துக்கு ஆதாரமின்றி அவதிப்படும் ஏழைகளையும், ரக்ஷிக்கிறதற்கு கருணைக்கண் திறப்பதில்லை.

அநேகர் பயிர்த்தொழில் லாபம் தருகிறதில்லையென்று விட்டுவிடத் தலைப்படுகிறார்கள். கீழ்த்தர ஜாதியாரோ மேன்மைபெற்று விடலாமென்று கருதி கண்காணிகள் வசம் சிக்கிக் கொள்கிறார்கள்.

### கஷ்ட-நஷ்ட-சகிப்புவேண்டும்.

சுகம்-லாபம் உண்டாகும்போது நம் சரீரம் கூடத் தெரியாவண்ணம் ஆனந்தக்கடலென மூழ்கிவிடுகிறோம். சுகத்துடனிருக்கும் துக்கத்தையும், லாபத்தோடிருக்கும் நஷ்டத்தையும் நீக்கமுடியுமோ ? இவ்விஷயத்தைப் பற்றி ஒவ்வொருவரும் நன்றாய் சிந்தித்துப்பார்க்கவேண்டும். கஷ்ட நஷ்டம் வரும்போது சகித்திருக்கவேண்டிய தவசியமன்றோ !

### நாட்டுவாசம்-நகரவாசம்.

நகரங்களில் ஜனநெருக்கம் அதிகப்பட ஆரம்பித்துவிட்டது. கிராமத்திலிருப்போர் சிலர் தங்களுக்குள்ள சிறிது நிலத்தையும் விற்று, கல்வி-ஆங்கிலம்-கற்று, பிறகு ஏராளமாய் சம்பாதித்துவிடலாமென்று குடும்பசகிதம் நகரவாசம் செய்யவந்து கடைசியில், கல்விக்காக செலவிட்டதொகையின் வட்டியேனும் கிடைப்பதில்லை. இக்காலத்திய கலாசாலைக் கல்வியைப்பற்றி எழுதப்புகின் நகைப்புக் கிடமாவதுமன்றி விஷயமும் பெருகும். என்றாலும் கருத்தை வெளியிடுவோம். இப்பொழுது கலாசாலையில் கற்பவர் ஏதேனும் வித்யாபட்டம்

பெற்றால் நன்மையுண்டாகும். இல்லையெனில்- இன்னவிதமென எழுதுவதற்கில்லை. கற்ற வரைக்கும் பிழைப்புக் கனுகூலமாமோவெனக் கவனிக்கில் ஒரு சிறிதுமில்லை. என்றாலும் அறிவு விளக்கமும் ப்ராஷாபிவிர்த்தியு முண்டா கிறது. உத்தியோகத்துக் காணும், தொழி லுக்காணும், (படித்தவைகளை நீக்கி) பழக வேண்டியதுதான்.

பயிர்த்தொழில் குறையவும், வேலைக்காரர் கள் வெளியூருக்கு கூலிகளாக செல்கிறார்கள்; இப்படி நிலங்கள் பயிரிடப்படாமலு மிருக்க லாம். இதனால் நிலம் சகாயமென நினைத்துவிட வேண்டாம். நிலத்தின் விலை அதிகப்பட்டுக் கொண்டே யிருக்கிறது.

வியாச்சியத்தால் சீரழிவு.

கோர்ட்டுகளுக்குச் சென்று நியாயம் பெறு வதற்கு எவரும் பின் வாங்குவதில்லை. சச்ச ரவு இல்லாதகுடும்பம் அபூர்வம். சகோதரர் கள் ஒற்றுமைப்படுகிறதில்லை. இவர்களுக்கு கோர்ட்டுதான் கதியாயிருக்கிறது. கருணைவாய் ந்தகவர்ன்மெண்டார் பொதுஜனங்களுக்கு எவ் வளோ நன்மைசெய்கிறார்கள். ஆனால் கோர்ட் டுகளையும், நியாயாதிபதிகளையும் அமர்த்திக் கொண்டு, "வாருங்கள், வழக்குத்தீர்க்கிறோம்" என்றும் அழைக்கவில்லை. வக்கீல்களும், நியா யாதிபதிகளும் அதிகப்பட்டுக் கொண்டேயி ருக்கிறதால், விவகாரம் குறையவில்லையென் பது விளங்குகிறது. கோர்ட்டில் செலவிடப் படும் செல்வத்துக்கு மதிப்பில்லை. கோர்ட் டுக்குப் பணம் ஓடாகத்தான் ஓடுகிறது.

இதரதேசங்களில் இம்மாதிரி இல்லாதிருக்க வில்லையென்றாலும், இந்தியாவில் அதிகம். ஒவ் வொருவரும் தத்தம் கடமைகளைக் குறைவின் றிச் செய்வார்களானால் மேன்மைதரும்.

## SOCIAL ESSAY ON FRIENDSHIP.

### ஸாமஷ்டி ஸாதனம்: நட்பு.

(மாசிமீ சஞ்சிகையின் 334-ம் பக்கத்தொடர்ச்சி.)

அல்காண்டரோ தான் காதலித்த மாதையும், உயிர்த்தோழனையும் விட்டுப்பிரிந்ததன்றி இபேஷியாவின் பந்துக்களால் நியாயசபையில் குற்றஞ்சாட்டப்பட்டான். ஏனென்றால், அவர்கள், இவன் இபேஷியாவை செப்டிமிய ஸனுக்கு பணம் பெற்றுக்கொண்டு விக்கிரயஞ் செய்து விட்டானென்று எண்ணிவிட்டார்கள். ஐயோ பாவம்! தான் நிரபராதி என்று தன்னு லான மட்டும் வாதித்தும் பயன்படவில்லை. பெருந்தொகை யபராதம் விதிக்கப்பட்டது. குறிப்பிட்ட காலத்திற்குள் மேற்படி அபரா தத் தொகையை செலுத்த சக்தியில்லாமை யால் இவன் சொத்துக்களை சர்க்காருக்கு சேர் த்துக்கொண்டதன்றி, போதாத தொகைக்கு இவனையும் அடிமையாக சந்தையில் கொண்டு போய் விற்றுவிட்டார்கள். அவனை ஒரு வர்த் தகன் வாங்கி, வேறு அநேக அடிமைகளுடன் சேர்த்து, வெயிலின் கொடூரத்தால் பயிர் பச் சைகளே காணப்படாததும், சாகுபடி செய்வ தற்கே ஏலாததுமான வோரிடத்தில் கொண்டு போய்ச்சேர்த்தான். அவ்விடத்தில் இவனுக்கு ஆடு மேய்ப்பதைவிட வேறு அலுவலகப்பட வில்லை. கட்டக் கந்தைக்கும், குடிக்கக் கூழுக் கும் திண்டாட்டமாயிற்று ஆனால் இவனுக்கு வேட்டையாடத் தெரிந்திருந்தபடியால், மிரு கங்களைக்கொன்றுதின்று உயிருடனிருந்தான். துன்பமோ நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டேவர சகிக்கமுடியாதவனுகி, உயிரைத் துறந்து விடலாமா?என்று சமயத்தை நாடிக் கொண்டிருக்கையில், தெய்வாதீனமாய் கிடை த்த சமயத்தை நோக்கி சந்தோஷமடைந்து, தப்பியோடிப்பலவிடங்களில் அலைந்து திரிந்து, கடைசியில் ரோமேனியா நகரம் வந்தடைந் தான்.

இவன் ரொமேனியா வந்தடைந்தபொழுது இவன் நண்பனாகிய செப்டிமியஸ் நியாயஸ்தலத்தில் விசாரணை செய்துக்கொண்டிருந்தான். இதைக் கேட்ட அல்காண்டர், "நல்லவேளை, நாம் அவன் கண்ணிற் படுவோமானால் அடைக்கலம் யாளங்கண்டு ஆதரிக்கப் . பின்வாங்கான்" என்று எண்ணிக்கொண்டு தன் தோழனிருக்கும் நீதிஸ்தலத்திற்குச்சென்று, கூட்டத்துடன் நின்றுக்கொண்டு அவன் முகத்தையே ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தான். நியாயாதிபதியோ வேலையின் மிகுதியால் தலையை நிமிராமல் எழுதிக்கொண்டிருந்து கச்சேரி கலையவும் வீட்டுக்குப் புறப்பட்டுவிட்டான். அவனை கிட்ட நெருங்கலாமென்று சென்ற அல்காண்டனர சேவகர்கள் பிடரிபிடித்துத் தள்ளி விட்டார்கள். என்ன செய்வான்! இருட்டும் சூழ்ந்துக் கொண்டது! இவனோ ஊருக்குப் புதிது; தெரிந்தவர்ளோ இல்லை; நண்பனோ இவன் முகத்தைப் பார்க்கவேயில்லை. தெருக்களில் படுத்துறங்கலாமென்றால் போலீசார் பிடித்துச் சிறையில் வைப்பார்கள். ஆதலால் ஊர்ப் புறத்திலுள்ள ஓர் பாழ்மண்டபத்தில் படுத்துத்தூங்கினான். அவ்விடத்தில் நடு இரவில், திருடரிருவர் வந்து, தாங்கள் களவாடிக்கொண்டுவந்த பொருள்களைப் பங்கிடுவதில் நேர்ந்த வழக்கால் ஒருவன் மற்றவனைக் கொன்றுவிட்டு, பொருள்களை சுருட்டிக் கொண்டு போய்விட்டான். ஊரில் பொருள்கள் கொள்ளை போனதைக் கேள்வியுண்ட போலீசார்கள் பல பக்கங்களில் தேடிக்கொண்டு இப்பாழ் மண்டபத்திற்கு வந்து, அல்காண்டர் தூங்கிக்கொண்டிருப்பதையும், சமீபத்திலேயே கொலையுண்ட மனிதன் தேகம் கிடைப்பதையும் கண்டார்கள். அல்காண்டரை எழுப்பினார்கள். நெடுநாளாய் பல இடுக்கண்களுக்குட்பட்டு, பலவிடமும் சுற்றியலைந்து திரிந்து வந்து, படுத்துறங்கினவனாதலால், அவன் தோற்றமே அவனுக்கு விரோதமாய் ஏற்பட்டது. ஆதலின் இவனையே குற்றஞ்சாட்டி நியாயாதிபதியின்முன் கொண்டுபோனார்கள். இவன் எவனுடைய நன்மையை நாடி இக்கதியடைந்தானோ அவனாலேயே விசாரணை செய்யப்பட்டு முடிந்துவிட்டது. இவனோ தன் துன்பங்களெல்லாவற்றிற்கும் பரிகாரம் நேருமென்றெண்ணினவனும், உயிர் துறக்கத்துணிந்தவனுமாதலின் தன்னுடைய மனத்தூய்மையைக் காட்டிக்கொள்ளவில்லை. கேஸ் ருஜுவாகிவிட்டபடியால், நியாயாதிபதி மகா கொடுமையானவும், அநீதாகதியுமான தண்டனை விதிக்க ஆரம்பித்தான். அத்தருணத்தில் தன்னுயிருக்கிடமாயிருந்து, நெடுநாளைக்குமுன் பிரிந்துபோன தன் நண்பனாகிய அல்காண்டரே இக்குற்றஞ் சாட்டப்பட்ட கைதி யென்று தெரிந்தது! என்ன செய்வானினி! நாம் காண்கிறது கனவு தானோவென்று கண்களைத் துடைத்துக் கொண்டான். கடைசியில், கைதி தன்னுடைய உயிர்த்தோழனென்பது வெட்டவெளிச்சமாய்ப் புலப்படவே, செப்டிமியஸ் மனம் என்னபாடுபடும்? தன் நன்மைக்காக அவன் தன்னுடைய காதலியைக் கொடுத்தும், சுயேச்சையையிழந்தும், பலதுன்பங்களுக்கு ஆளான அல்காண்டரையோ மரணதண்டனைக் குட்படுத்துவது! அவன் கொலை செய்யத் தகுந்தவனுமல்லவே! ஆனால் யாரறிவார் அவன்பெருமையை? ருஜுவோவேற்பட்டிருக்கிறது! தன் உயிர்த்தோழனைக் காண நேர்ந்ததே என்று ஒருவேளை மகிழ்வான்! ஐயோ! குற்றவாளி யாகிவிட்டானே என்று ஒருவேளை துன்புறுவான்! இவ்விதம் மத்துறுதயிர்போல் மனமுருகி அன்பின் மேலீட்டால் தன்னிலைமையையும் மறந்து, தன் தோழன்மேற் பாய்ந்து அவனைக் கட்டிக்கொண்டு ஓவென்று கதறினான். ஜனங்களனைவரும் திகைத்து நின்றார்கள். காரணம் விளங்கவில்லை. இவ்வித நேசர்களைக்கண்டு இரக்கமுற்ற கருணாநிதியாகிய பரமன் கிருபையால் திருட்டுப்போன சொத்தை விலைப்படுத்த முயன்ற, திருடனைப் போலீசார் பிடித்து நியாயாதிபதியிடம் கொண்டுவந்தார்கள். அத்திருடனும் தன் குற்றத்தை யொப்புக் கொண்டான்.

இப்பொழுது ஜனங்களுக்குண்டான குதூகலத்தையும், அல்காண்டருக்கும் செப்டிமியஸ்கீகுமுண்டான ஆனந்தத்தையும் அளவிடக் கூடுமோ? உடனே குற்றமற்ற அல்காண்டர் விடுதலையடைந்து செப்டிமியஸ் வீடு சேர்க்கப்பட்டு, தன் வாழ்நாள் முழுமையும் அவனிடத்திலேயே யிருந்து, அவனுடைய பொருள் யாவற்றையும் தன்னுடைய வையாகவே யனுபவித்து வந்தான். அப்பட்டணத்து ஜனங்களும் இவர்களுடைய நட்பின் பெருமையைக் கேட்டும், கண்டும் மனமகிழ்ந்தார்கள்.

இவ்விதம் அல்காண்டரைப்போல் தன்னுயிருக்கு இருப்பிடமென்று கருதநேர்ந்த காதலியைத் தன்தோழனைக் காப்பாற்றும்பொருட்டு கொடுக்க மனமொப்புகிறவரும், அதனால் நேரும் பல துன்பங்களையு மனுபவிக்கக் கருதுபவரும் அருமையிலும் அருமை. அவ்விதமிருப்பவருக்கு செப்டிமியஸைப்போல், தனது நண்பனுடைய ஈனஸ்திதியையும், அவன் பேரில் சாட்டப்பட்ட கொலைக் குற்றத்தையும், தன்னுடைய உயர்ந்த நிலைமையையும் கவனியாது, அவனைக்கட்டி யாலிங்கனஞ் செய்து பரிவுகாட்டியதன்றி, பிறகு தன் பொருளனைத்தையும் நண்பனுடைய வையாகச் செய்பவரும் அரிதென்றே கூறலாம்.

"கதிரவ னுதிப்பதெங் கேனளின மெங்கே
களித்துள மலர்ந்த தென்ன,
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
கருத்தினட் பான தென்ன,
மதியமெங் கேபெருங் குமுதமெங் கேமுக
மலர்ந்த மகிழ் கொண்டதென்ன,
வல்லிரவு விடிவதெங்கே கோழி யெங்கே
மகிழ்ந்து கூவிடுத லென்ன,
நிதியரச ரெங்கே யிருந்தாலு மவர்களொடு
நேச மொன்றுயிருக்கு,
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந்தாலு மவர்
நிறைபக்ஷ மறவார்கள் காண்,
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவி சோணாட் டதிபனே,
மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு
மலை மேவு குமரேசனே."

---

## "PEARLS OF FAITH."

SELECTED AND STRUNG TOGETHER FOR PARENTS AND CHILDREN TO WEAR

*From the Selected Sayings of St. Vemanna.*

ஆந்திரபாஷையில், பிரஹ்மக்ஞானியும், அருட்கவியுமாகிய,
வேமன்ன மகாகவி அருளிச்செய்த
பத்யங்கள்.

*(Fifth Series.)*

(ஆபத் சந்நியாசத்தாற் பயனில்லை.)

1. உள்ளநாளெல்லாமங் குற்றபுலன் வெல்லாமல்
தள்ளரியசாவுவரச் சந்யாசம்—கொள்ளுதலால்
கிட்டுமோ முத்தியது கீழகன்ற நாளெல்லாம்
கட்டியவுள்ளத் தனுக்கே காண்.

(இ-ள்.) ஜீவித காலமெல்லாம் ஐம்புலன்களை யடக்காமல் ஆசாபாசங்களில் உழன்று பின்பு மரணம் வரும்போது ஆபத்சந்யாசம் வாங்கிக்கொள்ளுதலாலே ஒருவனுக்கு மோக்ஷம் கிடைத்துப்போமா, கிடையாது. ஆயுள் முழுதும் எவன் மனோ நிக்கிரகம் பண்ணி வருகின்றானோ அவனுக்கே முத்தி லபிக்கும்.

(உலோபி உதாரிக்குச் சமானமாக மாட்டான்.)

2. கோவாகாதற்பங் கொடுவரியா காதுச்சம்
மாவாதலில்லை மசகங்காண்—மேவும்
உடற்பருமனெத்தனைதா னுற்றிடினும் லோபி
கொடுப்பவ னேரராகான் குறி.

(இ-ள்.) எவ்வளவு தான் உடல்பருத்து உருவம் சிறந்த போதிலும் நாய் பசுவுக்குச் சமானமாகாது: முயல் புலிக்குச் சமனாகாது. கொசுகு யானைக்குச் சமனாகாது. அதுபோல, எத்தனைதான் பெருமை பாராட்டிக் கொண்டபோதிலும் உலோபி உதாரிக்குச் சமான மாகமாட்டான்.

(கடவுள் நம்பினவர்க்கன்றி மற்றவர்க்கில்லை.)

3. இல்லனெனச்சொல்வார்க் கிலனேயெஞ்ஞான்று மிலன்
அல்லனெனச்சொல்வார்க்கு மல்லனே—தொல்லுலகில்
நற்றுணையாப்பற்றினர்க்கு நற்றுணையா மேவுமவன்
பெற்றியெவ ரோர்வார் பெரிது.

(இ-ள்.) ஈசன் இல்லன் என்று சொல்வார்க்கு எந்நாளும் இல்லனே யில்லன். அல்லனென்று சொல்வார்க்கும் அல்லனே அல்லன். ஆயினும் தன்னையே உலகில் துணையாக நம்பியடைந்தவர்களுக்கு அகலாத் துணையாயும் உள்ளான். அவன் அளவிடற்கரிய பெருமையை அறிபவர் ஒருவருமில்லை.

(பாத்திரமறிந்து பிச்சையிடவேண்டும்.)

4. சோறிறங்கானுக்கிட்ட சோறுவீண் மன்றி
வேறுபயனுண்டோ விம்மேதினியில்—ஆறிதுபோல்
செல்வமுள்ளார்க்கீந்த செழும்பொருள் வீணுமன்றி
நல்கு பயனுண்டோ நவில்.

(இ-ள்.) அசிரணத்தால் சோறு வேண்டாதவனுக்குப் போட்டசோறு வீணாக எறியப்படுதலன்றி இட்டவனுக்கு ஒரு பிரயோசனத்தைக்கொடுக்குமோ? அதுபோலவே பொருள் உடையவர்களுக்குத் தானமாகக்கொடுக்கும் பொருளால் கொடுத்தவனுக்கு யாதும் பிரயோசனமில்லை.

(பிச்சையிடாதவர் மறுபிறப்பில் வறுமையால் வருந்துவார்கள்.)

5. இருந்துமிரவலருக் கிட்டறியார் பின்பு
வருந்துவரான்மற் றோர்பிறப்பிற்—பொருந்த
இடுவாரிலாதைய மீதுணர்வீர் நன்று
கெடுவீ ரல்லீர் நும்மதி.

(இ-ள்.) பொருளிருந்தும் யாசிக்கின்ற ஏழைகளுக்குக் கொடுத்தறியாத உலோபிகள் மறுபிறப்பில் தாம் வறுமையடைந்து தமக்குப் பிச்சையிடுவாரில்லாமல் வருத்தமடைவார்கள். இவ்வுண்மை தனை நன்றாகத் தெரிந்துக் கொள்ளுங்கள். வீணாகப்புத்திகெட்டுப் போகாதீர்கள்.

(நாம் கொடுப்பதுபோல நமக்கும் கிடைக்கும்.)

6. தண்டாமலீவார்க்குத் தண்டாமலே கிடைக்கும்
தண்டினபின்னீவார்க்குத் தண்டின்பின்—தண்டியும்
ஈயாதார்க்கியாதுங் கிடைத்தலிலை யிவ்வுலகில்
நாயமிது நேர்ந்திடுவீர் நன்கு.

(இ-ள்.) கேளாமலிருக்க வலியச்சென்று ஏழைகளுக்கு உபகரிப்பார்களுக்குக் கேளாமலே அதிட்ட வசமாகச் செல்வம் கிடைக்கும். கேட்டபின் கொடுப்பார்களுக்குக் கேட்ட பின்னுயினும் கிடைக்கும். கேட்டும் கொடாத பரம லோபிகளுக்கு இவ்வுலகில் யாதும் கிடைத்தலில்லை. இது நீதியே யன்றிவேறல்ல. தெரிந்து கொள்வீராக.

(அதிர்ஷ்டமில்லாதவனுக்குக் கூடிவரமாட்டாது.)

7. அதிட்டமில்லாப்பேதைக் கரும்பரிச வேதி
விதித்திடினும் மில்லாது வீயும்—கதித்ததிரும்
காரிருந்துவிழாலங் கட்டியது கைப்புகலும்
ஓர்நொடியி லேயுருகல் போல்.

(இ-ள்.) அதிட்ட வீனனுக்குத் தொட்டதெல்லாம் பொன்னுக மாற்றும் பரிசவேதி விதிவசத்தால் ஒரு வேளை கிடைத்தபோதிலும் உடனே அது மில்லாமல் இழந்து போகப்படும். எப்படி யென்னில் இடி முழங்குகின்ற மேகத்திலிருந்து மழையோடு விழுகிற ஆலங்கட்டி ஒருவன் கையில் எடுத்த மாத்திரத்தில் எப்படி நொடிப் பொழுதில் உருகிப்போகின்றதோ அதுபோல.

(அறிவீனர் உலகவின்பங்களால் மகிழ்ச்சியடைவார்கள்.)

8. குறைத்துமரஞ்செடியைக் கொண்டெழுப்பிச் சூழப்
பெருத்தமதிலுள்ளிடத்துப் பெட்பால்—திருத்தமுறு
மாளிகையைக்கட்டி மகிழ்வார்க ளோராரே
மேல்விளையுந் தீமையினை மிக்கு.

(இ-ள்.) மரஞ்செடிகளெல்லாவற்றையும் வெட்டி யெறிந்து நாற்புறமும் மதிலெழுப்பி நடுவே உன்னதமான அழகிய மாளிகையைக் கட்டி ஆசந்த்ரார்க்கம் இருக்கப் போகின்றேமென்று மகிழ்ச்சியடைகின்றவர்கள் மேலே தமக்குண்டாகும் கெடுதிகளை ஆராய்தலில்லை.

(அயோக்கியமான இடத்திற் செல்லலாகாது.)

9. கட்கடையிலேயிருந்து காணவமு துண்ணுகினும்
உட்கொளுதல்கள்ளென் றுணர்ந்திடுவார்—இப்புவியில்
ஆதலினல்யாமிருத்தற் காகாவிடத் திருக்கத்
தீதுவரு நல்லாய் தெரி.

(இ-ள்.) கள்ளுக்கடையிலிருந்து பிறர் காணப் பாலையுண்டபோதிலும் பார்ப்பவர்கள் அதைப் பாலென்றெண்ணர்கள் கள்ளென்றே எண்ணுவார்கள். ஆகையினலே நாம் இருக்க யோக்கியமில்லாத இடத்திற் சென்றிருந்தால் கெடுதி விளையும்.

(அற்பர் சகவாசம் அநர்த்த ஹேதுவாகும்.)

10. அற்பர்தமைநந்தமகத் தேவரவி டுப்பின்
பொற்பிழந்துதுன்பம் பொருந்திடுவீர்—முற்படுமோர்
ஈவாயினூடே வயிற்றினிடைப் புக்கால்
மேவாதோ மிக்க துயர்.

(இ-ள்.) ஈனபுத்தியுடையவர்களை உம்முடைய வீட்டில் வரவிடங்கொடுத்தால் அதனால் உங்கள் சுகத்தையும் பெருமையையும் இழந்து துன்பமடைய வேண்டிவரும். எப்படியென்னில், ஈயொன்றை வயிற்றுக்குள் புக விடங்கொடுத்தால் அதனால் எப்படித் துன்பமுண்டாகின்றதோ அதுபோல.

(கொடுப்பதனால் இரந்தார்க்குக் குறையில்லை.)

11. ஐயம்புகுவார்தா மன்னதிலோர் கூறன்பால்
ஐயம்பிறர்க்கிடுவா ராமாயின்—ஐயம்
புகுந்திடலான் மற்றவர்க்குப் போதுதலின் றீனம்
மிகுந்திடுமே வேண்டும் புகழ்.

(இ-ள்.) பிச்சையெடுத்துப் பிழைப்பவர்கள் தாங்கள் எடுத்த பிச்சையில் ஒருபாகம் தம்மைப் போன்ற எளியவர்க்குப் பிரீதியோடு கொடுப்பாராயின் அவர்க்குப் பிச்சையெடுத்தலினால் ஓர் இளப்பமும் இல்லை. அதனால் மிக்க புகழேயுண்டாகும்.

(மண்முதலான விக்கிரகங்களில் ஈசனைக்காண முடியாது.)

12. மண்ணினுலோகத்தின் மரத்திற்சிலை தன்னில்
எண்ணும்படத்தி லிருஞ்சுவரில்—நண்ணும்
பதுமையினுங் காட்டுவனோ தன்னைப்பரமன்
புதுமையிது காணப் புகல்.

(இ-ள்.) மண் உலோகம் மரம் சிலை முதலியவற்றாற் செய்த விக்கிரகங்களிலேனும் படம் சுவர் முதலியவற்றிலெழுதிய உருவங்களிலேனும் வேறுவகையான பிரதிமைகளிலேனும் பரமாத்மா தன்னை எளிதுகாணும்படி காட்டுவானோ. அவ்வுருவங்களில் அவனைக் காணப்புகுதல் ஆச்சரியம்.

(பொருளுடையானைப் பெண்கள் வெகுமானிப்பார்கள்.)

13. கைப்பொருளொன் றுள்ளானைக் காணினுடன் றந்துகிலால்
பொற்பினடைபாவாடை போடுவரால்—அப்பொருளொன்
றில்லானைப்பெண்கள் நடைப்பிணமா வெண்ணியவன்
அல்லலுறவே யிகழ்வா ராங்கு.

(இ-ள்.) பெண்மக்கள் புருஷன் பணமுள்ளவனானால் அவனைக் கண்டவுடன் தாமுடுத்த ஆடையைக் கூடவிரித்து நடைபாவாடை போடுவார்கள். பொருளில்லானை நடைப்பிணமா யெண்ணி அவன் வருந்தும்படி அவனை இகழ்வார்கள்.

(அருளில்லாக் கொடியர்போற் பயனற்றதில்லை.)

14. வேம்பும்விடமு மருந்துக்கா மேதினியில்
ஆம்பயனில்லாதபொரு ளாருலகில்—காம்புறழ்தோள்

நங்காய்தயையில் நலனற்ற மாந்தர்போல்
இங்கேது மில்லை யினி.

(இ-ள்.) ஒன்றுக்கும் உதவாவென்று கருதும் வேம்பும் விஷமும்கூட சிற்சில மருந்துகளுக்குப் பிரயோஜனமாகும். ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாத பொருள், தயையில்லாத துஷ்ட ஜனங்கள்போல் உலகில் வேறொன்றுமில்லை.

(யதா ராஜா ததாப்ரஜா.)

15. மன்னனொருமற்கடமேல் மந்திரிமார் பன்றிகளாம்
பன்னும்படைத்தலைவன் பக்கியெனில்—துன்னுமொரு
சேவகருமாங்கிரையாம் திண்களிறும் வாசியும்
தாவுமெலி பூனையுமாம் சார்ந்து.

(இ-ள்.) அரசன் குரங்கானால் அவனுக்கேற்ற மந்திரிகள் பன்றிகளாவர். படைத்தலைவன் திற மற்ற பட்சியானால் அவனைச்சூழ்ந்த சேவகரும் பசுக்களாவர். ஆனையும் குதிரைகளும் எலியும் பூனைகளுமாகும். அதாவது அரசன் மதியில்லானாயின் மந்திரிகள் அவனிலும் மதியற்றவராவாரென்றும், சேனைத்தலைவன் திறமையும் சௌரியமும் இல்லானாயின் அவன் கீழ்ச்சேனைகள் பயனற்றவாகுமென்றும் சொல்லியவாறு.

(கோபத்தை அடக்கவல்லார்க்கு எல்லாம் கைகூடும்.)

16. கோபத்தான்மேன்மை யனைத்துங் குலைந்துபோம்
கோபத்தாலுட்டுயரங் கூர்ந்திடுமே—கோபத்தை
உள்ளடக்குமாற்ற லுடையார்க்குக் கைகூடும்
கொள்ளும்விழை வெல்லாங் குறி.

(இ-ள்.) கோபத்தால் மேன்மையெல்லாம் குலைந்துபோகும். விசேஷமான துக்கங்க ளுண்டாகும். கோபத்தை அடக்கவல்லவனே தான் எண்ணின காரியத்தை நிறைவேற்ற வல்லவனாவான்.

(கோபத்தால் எல்லாத் துன்பமும் உண்டாகும்.)

17. கோபத்தாற்போதும் நிரயக் கொடுந்துயரம்
கோபத்தால் நற்குணங்கள் குன்றிடுமால்—கோபத்தால்
வாணாளுமங்தோ வளராது தேய்ந்திடுமே
மாணாது கோபம் மதி.

(இ-ள்.) கோபத்தாலே நரகத்துன்ப முண்டாகும். நற்குணங்களெல்லாம் குறைந்துபோம். ஆயுளும் விர்த்தியாகாது க்ஷீணிக்கும். கோபம் எல்லாவற்றாலும் கெடுதியே உண்டுபண்ணும்.

(இன்னா ரின்னாரோடு விளையாடல் தீது.)

18. ஆரழலினோடுமிக வற்பரொடு மாற்பியர்தம்
நேரிழையாரோடு நிலைதவறும்—பூரியர்கள்
தம்மோடு மென்றுங் களித்திடுத ருனறிவீர்
நும்மாவி நூறி விடும்.

(இ-ள்.) நெருப்போடும் அற்பரோடும் பிறர் மனையாரோடும் தம் நிலையிலிருந்து வீழ்ந்த பதிதர்களோடும் உறவாடிக்களித்தல் உங்களுக்குப் பிராணஹானியை யுண்டுபண்ணும்,

(உணவு உயிரைக்காத்தலுக்கும் போக்கலுக்கும் வல்லது.)

19. ஏறுகினுங்கொல்லுமஃ தில்லையெனினுங் கொல்லும்
தேறுகினுமுண்ணுமொரு தீனதுவே—வீறுடனே
போற்றுதற்குமாவிதனைப் போக்குதற்கும் போதுமே
சாற்றுமுண வொன்றதுவே தான்.

(இ-ள்.) நாமுண்ணும் ஆகாரம் அளவில் மீறினாலும் மரண முண்டுபண்ணும். முற்றும் இல்லாவிடினும் சீவன் போய்விடும். ஆகையினாலே பிராணனை ரக்ஷிப்பதற்கும் போக்குதற்கும் இரண்டுக்கும் நாமுட்கொள்ளும் ஆகாரமே போதுமானது.

(பெரியோர் வார்த்தை இதமாயிருக்கும்.)

20 பேரறிஞர்பேசும் பிழையறுசொல் பைம்பொழிலில்
சேருமொருகோகிலத்தின் தீங்குரல்போலும்—ஆரறிவில்
மூடர்மொழிகாகத்தின் முற்றுஞ் செவிக்கியலா
நீடுகரை விற்று நிகர்.

(இ-ள்.) பேரறிவுடையோர் பேசுகின்ற குற்றமற்ற இனிய வசனங்கள் குளிர்ந்த சோலையிலுள்ள இனிய குயிலின் மதுரமாகிய குரலை யொக்கும். அறிவில்லாத மூடர்களுடைய வார்த்தைகளோ காதுக்கு நாராசம் போலும் கடூரமாகிய காக்கையின் தொனியை ஒக்கும்.

(நரகத்துன்பம் யாவினும் கொடிது.)

21. எண்ணிறந்ததுன்பங்க ளிவ்வுலகத் தெய்திடினும்
நண்ணுநிரயத்துயர நண்ணரிதால்—கண்ணியிது
மற்றவர்க்குச்செய்யுந் துயரை மறந்திடுவீர்
நற்றவந்தான் மற்றதனி லில்.

(இ-ள்.) கணக்கில்லாத துன்பங்களை இந்த உலகத்திலே அநுபவித்தபோதிலும் நரகவாதனை மாத்திரம் அநுபவித்தல் மிகப் பிரயாசமாகும். இதை நினைந்து பிறருக்குச் செய்யும் துன்பங்களைச் செய்யாதொழிவீர்களாக. அவற்றை மனத்தாலும் நினையாமல் முற்றும் மறப்பீர்களாக. இதைவிட மேலான தவம் வேறில்லை.

(பரோபகாரத்தில் பெரிய புண்ணியமில்லை.)

22. பிறர்க்குதவிசெய்யப் பெரும்பவங்க ணீங்கும்
பிறர்க்குதவியேபிடிக்கும் கோலாம்—பிறர்க்குதவி
வானுலகமேற்றும் வழியாகு மற்றதனில்
ஆன துணை யில்லை யறி.

(இ-ள்.) பரோபகாரத்தினாலே பாவங்கள் நீங்கிப்போகும். பரோபகாரமே நமக்கு பிடித்துச் செல்லும் ஊன்றுகோலாம். பரோபகாரமே வானுலகத்துக்கு வழியுமாகும். பரோபகாரத்திலும் மேலான துணை வேறில்லை.

(வலியில்லாதகாலத்தில் தொடங்கும் காரியங்கள் நிறைவேறா)

23. மெலிவுற்றவேளையினில் வெம்மடங்க லானும்
வலியற்ற நாயால் வருந்தும்—நலிவுற்ற
காலத்துநாந்தொடங்குங் கன்மங்க ளொன்றேனும்
ஞாலத்திலே முடியா நன்கு.

(இ-ள்.) மெலிந்தபோது சிங்கம்கூட நாயால் வருத்தமடையும். மெலிந்த காலத்தில் நாம் தொடங்கிச்செய்யும் காரியங்கள் ஒன்றும் நிறைவேறாது.

## THE BLOCKADE AND ITS EFFECTS.
### THE SCARCITY OF PAPER.
## மறியல் யுத்தமும் அதன் பலன்களும்.
### காகிதப் பஞ்சம்.

இந்த யுத்தம் காரணமாக நேர்ந்த பல இக்கட்டுகளில் காகிதப்பஞ்சம் பத்திரிகைகளுக்குப் பெரிய கஷ்டநஷ்டத்தை யுண்டுபண்ணி வருகிறது. இந்தியாவில் காகிதம் செய்யும் யந்திரங்கள் வடக்கே சில இருக்கின்றன. அவைகள் செய்யும் காகிதங்கள் பெரும்பாலும் கவர்ன்மெண்டார் உபயோகத்துக்கும் ரயில்வே கம்பெனியார்கள் உபயோகத்துக்கும் உபயோகமாகிவிடுகிறதாகவும் இதரர்களுக்குக் கொடுக்க அதிகமாகக் காகிதம் கையிருப்பில் இல்லையென்றும் சொல்லுகிறார்கள். 100 கட்டு காகிதத்துக்கு உத்தரவு செய்தால் அதைக் கவனிக்க ஒருவருஷத்துக்கு மேலாகிறது. இந்த ஒரு வருஷகாலத்துக்கும் அவர்களிடத்தில் கட்டிவைத்த ஏராளமானமுன்பணத்துக்கு வட்டியில்லை. உத்தரவு செய்தபடி காகிதம் கிடைக்குமென்கிற உறுதியுமில்லை. உத்தரவையும் முன்பணத்தையும் வாங்கிக்கொண்டு சரக்குக் கொடுக்கமுடியும் என்கிற நிச்சயமில்லையென்கிற ஷராவொன்று போட்டு பதில் எழுதிவிடுகிறார்கள். இப்படிப்பட்ட யுத்த காலத்தில் செய்யப்படும் வர்த்தக உடன்படிக்கைகள், கண்டிராக்டுகளெல்லாம் "Force Majeur" என்று சொல்லப்படும் ஒருவிதிக்குள்பட்டவையாக விருக்கின்றன. அதாவது சண்டைக்காலத்தில் பலவந்தமாக நேரிடும் இக்கட்டுகளினால் தடை நேர்ந்தால் அதற்கு அவர்கள் உத்தரவாதியில்லை யென்பதாம். 'பலவந்தம்' என்பது கப்பற்சேதம், பொருட்சேதம், சண்டைச்சேதம் என்கிற இவைக்கு மட்டுமன்றி, சரக்கு அகப்படாமை, கையிருப்புச் சரக்குப் போதாமை முதலான இயற்கை, செயற்கை நிர்ப்பந்தங்கள் எல்லாவற்றிற்கும் பொருந்துவதாகச் சொல்லப்படுகிறது. விலையோ நாளுக்குநாள் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறிவருகிறது. 1916ஹு பிப்ரவரிமீ கொடுத்த உத்தரவை நிறைவேற்ற 1917ஹு பிப்ரவரிமீ பிறந்தும் உத்தரவும் முன்பணமும் வாங்கினவர்களுக்கு சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. எவ்வளவோ நயபயமாய் அவர்களை அனுசரித்து உத்தரவை நிறைவேற்றச் சம்மதிக்கச்செய்தும் விலைப்பாடு சரியாகவும் உறுதியாகவும் சொல்வதற்கில்லை. ஒருதரம் உத்தரவு கொடுத்து முன்பணம் கட்டினவருக்கே அவசரம் என்று கேட்டபொழுது ஒன்றுக்கு ஒன்றரை விலைபோட்டு கொஞ்சம் சரக்குக் கொடுத்தார்கள். மறுப்டியும் நெருக்கிக் கேட்டபொழுது சரக்கைக் கொடுக்கச் சம்மதித்தும் விலையில் கட்டுப்பட்டுப் பேசவில்லை. 'பில்' செய்த பிற்பாடுங்கூட, திடீரென்று ஒரு தந்திவந்தால் அதை ரத்து செய்துவிட்டு, விலையைத்தூக்கி வேறு 'பில்' செய்கிறார்கள். "இது அடுக்குமா?" என்று கேட்டால் வேண்டுமானால் வாங்கிக்கொள், இல்லாவிடில் போ என்கிறார்கள். லண்டனில் டைம்ஸ் பத்திரிகை காகிதப்பஞ்சத்தினிமித்தம் அதன் விலையைத் தூக்கினதன்றி, இன்னும் அதிகமாகத் தூக்கப்போவதாக ஒரு தந்திசமாசாரம் வந்தது. இந்தத் தந்திசமாசாரம் பத்திரிகைகளில் வெளிவந்ததன் பலனை நமக்குத்தெரிந்த ஒருவர் கணக்கு சனிக்கிழமையன்று போடப்பட்டதற்குமேல் திங்கட்கிழமையன்று 25 ரூபாய் ஜாஸ்தி யாக்கிவிடப்பட்டது. இது இங்கிலீஷ் வர்த்தகர்கள் நடைதோரணையானால் இவர்களிடம் வாங்கி விற்கிற சுதேச வர்த்தகர்கள் செய்யும் சூதுவாதுக்குக் கேட்பானேன். "சபலபுத்தி அபலகாரணம்" என்பார்கள். அப்படியென்றால் பலக்குறைவு என்றும், நிஷ்பலம் அளிப்பது என்றும் அர்த்தம் செய்யலாம். வியாபாரத் துறையிலும் மற்ற எந்தத் துறையிலும் இயல்பாயுள்ள அநித்திய சுபாவத்தோடு யுத்தக் குழப்பத்தினால் நேர்ந்துள்ள அநிச்சய காரணமும் சேர எல்லாம் முறைபிறழ்ந்து நடக்கக் காரணமாகிறது. இஃதேபோல் வியாபாரத்துறைகள் ஒவ்வொன்றிலும் இறங்கி ஜீவனம் செய்கிறவர்கள் தங்கள் அனுபவத்தைச் சொல்லி முறையிடுகிறார்கள். "போதாக் குறைக்குப் பொன்னியம்மன் குறையொன்று" என்கிற பழமொழிப்படி சண்டைகாரணமாக வுண்டாகும் இந்தக் குழப்பங்கள் போதாவென்று பணமுள்ளவர்கள் சரக்குகள் கிராக்கியறிந்து ஏராளமான சரக்கைப் பிடித்து அடைத்து வைத்துக்கொண்டு, தரவுகாரர்களைக்கொண்டு சரக்குக்கு கிராக்கி யுண்டுபண்ணுவதன்றி சரக்கே யகப்படாதென்கிற பீதியும் உண்டுபண்ணி இந்தக் குழப்பத்தில் ஒன்றுக்குமூன்றாக விலையை ஏற்றிவைத்து

அதிக் கிராக்கிகாட்டி விற்கிறார்கள். இந்த அநர்த்தங்களெல்லாம் உணவு பொருள்களிலும் விளையக்கூடியவைகளே. அப்படி விளையும்பொழுது அன்றாடம் ஜீவனம்செய்கிற ஏழைகள் ஜீவனத்துக்கு வகையேற்படாத போது பீதிகொண்டு கலகம்செய்யத் துவக்குவார்கள். இப்படிப்பட்ட கலகங்கள் ஆபத்தாய் முடியுமாதலால் சண்டையில் சம்பந்தப்பட்ட தேசங்களிலெல்லாம் உணவுபொருள்களின் விலையை மேற்பார்வைசெய்து சரிப்படுத்திவர ஒரு உத்யோகஸ்தரை அதற்கு வேண்டிய அதிகாரதோரணையோடு 'கமிஷனர்' என்று பேரிட்டு நியமித்து வருகிறார்கள். அவர்கள் தேசமொத்தத்துக்கு உக்கிராணக்காரர்கள் போலிருந்து மேலே பார்த்துவர வேண்டியது. "சட்டியிலுள்ள மட்டும்தான் அகப்பையில் வரும்" என்கிற பழமொழிப்படி உணவுபொருள்கள் போதுமான அளவு தேசத்திலிருந்தால்தான் இவர்கள் அதிகாரம் செய்நேர்த்திபெறும். போதுமான உணவுபொருள் இல்லாதபோது இவர்கள் கடமை மிகக்கஷ்டமாய் முடிகிறது. இப்படிப்பட்ட கஷ்டங்களைப் பொறுத்துச் சமாளிப்பதற்கு யுத்த சாமர்த்தியத்திலும் அதிகசாமர்த்தியம் வேண்டும். எதிரிகளை வயிறெரட்டச்செய்து வசப்படுத்துவதின்மர்மம் இதுதான். எப்படிப்பட்ட நோய்களுக்கும் எதிரிகளுக்கும் இடங்கொடுத்துச் சமாளித்தாலும் பசிநோய்க்கு இடங்கொடுத்துச் சமாளிப்பது மஹாகஷ்டம். முன்காலங்களில் கோட்டை கொத்தளங்களை முற்றிகைபோட்டு இப்படிப்பட்ட சாகஸம் செய்துவந்தார்கள். இப்பொழுது "மறியல் யுத்தம்" (Blockade) என்றுசொல்லி, தேசம், கண்டம் முழுவதையும் பிரித்துவிடுவதன்றி கரைகடந்து எங்கும் பரவியுள்ள சமுத்திரத்திலும் இந்த மறியல்யுத்தம் செய்வது சாத்தியமாக விருக்கிறது. இதற்கு முக்கிய சாதனமாயிருப்பது 'ஸப்மாரின்' என்றுசொல்லும் சமுத்திரமட்டத்துக்குக் கீழே நீரில் அமிழ்ந்து சென்று பெரியபெரிய கப்பல்களையும் உடைக்கத்தக்க வசதிவாய்ந்த படகுகளேயாம். இதில் ஜெர்மானியர்கள் கைதேர்ந்தவர்களாக விருக்கிறார்கள். அவர்கள் கைப்பலத்தை இப்பொழுது காட்டவும் தொடங்கியிருக்கிறார்கள். இதன்முடிவு எப்படியாகுமோ பகவானுக்குத்தான் வெளிச்சம்.

## THE PUBLIC SERVICES COMMISSION REPORT.

## பப்ளிக்ஸெர்விஸ் கமிஷன் ரிபோர்ட்டு

1912-ம் வருஷம் ஸெப்டம்பர்மீ 5உ நியமிக்கப்பட்டு 1913-ம் வருஷம் இந்தியாவில் எங்கும்சென்று அலைந்து சாக்ஷிகள் விசாரித்து வந்த பப்ளிக் ஸெர்விஸ்கமிஷன் சபையாருடைய ரிபோர்ட்டுஜனவரிமீ 25உ சென்னையிலும் மற்ற எல்லாவிடங்களிலும் பிரசுரிக்கப்பட்டது. அந்த ராயல்கமிஷனர்களில் ஒருவரான கனம். மிஸ்டர் கோக்கலேயவர்கள் இறந்துவிட்டதினால் அவரொழிந்த மற்றவர்கள் தயாரித்த ரிபோர்ட்டு வெளியாகியிருக்கிறது. அவர்களில் கனம் மிஸ்டர் ஜஸ்டிஸ் அப்தர்ராஹிம் அவர்கள் ஒருவர்மட்டும் மிஸ்டர் கோக்கலேயோடு கலந்துபேசி அவருடைய அபிப்பிராயத்தையும் சேர்த்து ஒரு தனி ரிபோர்ட்டு எழுதியிருக்கிறார். அவரல்லாத மற்றவர்கள் எல்லாரும் எழுதியிருக்கும் ரிபோர்ட்டு இதற்கு முன்னிருந்ததிலும் அதிகமாக அந்நிய சிப்பந்திகளை நியமிப்பதற்கு அநுகூலமானதாயிருக்கிறதென்று ஜனங்கள் எங்கும் குறைகூறிகொண்டிருக்கிறார்கள். இந்தியன் ஸிவில் ஸெர்விஸில் 100-க்கு 75-பேர்கள் ஐரோப்பியர்களாகவேயிருக்கவேண்டு மென்றும் பாக்கியுள்ள 100-க்கு 25-பேர்கள் மட்டும் இந்தியாவிற் பிறந்தவர்களாக விருக்கலாமென்றும் கண்டிருக்கிறது. இந்தியாவில் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் ஜாதிவர்ணபேதம் பாராமல் சரிசமமாக எல்லாரையும் நடத்திவரப்படும் என்றுள்ள உத்தமகோட்பாடு இந்த ரிபோர்ட்டினால் தள்ளிவைக்கப்பட்டதாகிறது. இதுபோலவே இன்னும் உள்ள இதர சிபார்சுகளும் இந்தியர்களுக்குப் பிரதிகூலமாகவும், அந்நியர் கையாட்சிக்கு அநுகூலமாகவுமிருக்கிறதென்று எங்கும் ஜன அதிர்ப்தி அதிகமாய்ப் பரவியிருக்கிறது. இந்த ரிபோர்ட்டு சிபார்சுகளைக்குறித்து ஆக்ஷேபித்து விண்ணப்பம் செய்துகொள்ளச் சென்னையில் ஒரு பொதுக் கூட்டம் கூடிற்று.

## TRAVEL AND DESCRIPTION.
## AGRA.

### யாத்திரை க்ஷேத்திர வர்ணனை ஆக்ரா.

(மாசிமீ 349-ம் பக்கத் தொடர்ச்சி)

Mothee Musjid:—முத்துமஸ்ஜீத். இந்த பிர்மாண்டமான கட்டட வெளிச்சுவரும் பட்டிப்பூர் கற்களால் கட்டப்பட்டது. உள்பாகமெல்லாம் வெள்ளைக்கற்களால் கட்டியிருக்கிறார்கள். கட்டடமானது தகுந்த மோட்டின்பேரில் கட்டியிருப்பதால் சுமார் 30-படிக்கட்டுகளை ஏறியே கட்டடத்திற்குள் நுழையவேண்டும். உயரமான கல்ஸ்தம்பங்கள் வைத்து கட்டப்பட்ட ஒரு அலங்காரமான மண்டபமும், மேல்புறத்தில் வாழைப்பூ வடிவமான கோபுரங்களும், அவற்றின்மேல தங்கமுலாம் பூசிய கலசங்களும், அதிக விநோதமாய்க் காணப்படுவதுடன் எதிர்மேடையில் தண்ணீர்த்தொட்டிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த மஸ்ஜீதைப் பார்ப்பவர்கள் ஆனந்தமடையாமலிரார்என்பது திண்ணம்.

ஆக்பருடையசமாதி. (The Tomb of Akbar.) இது ஆக்ராவிலிருந்து ஆறுமைல் தூரத்திலுள்ள 'சிகந்தர்' என்னும் கிராமத்தையடுத்து இரண்டுபர்லாங்கு அகலமும் அதேநீளமும வைத்து கட்டப்பட்ட உன்னதமான கட்டடம். மேலே வைக்கப்பட்டிருக்கிற ஸ்தூபி, கோபுரம் இவைகளின் உயரம் உட்பட 130-அடி உயரமுள்ளதாய் பெரிய வண்டிகளும் யானைகளும உள்ளே செல்லக்கூடிய வாயில்களையுடையதாய், பட்டிப்பூர் கற்களை வெளிப்புறத்திற்கு வைத்தும், வெள்ளை ஸ்படிகக் கற்களை உள்பாகத்திற்கு வைத்தும் கட்டப்பட்டது. இதன் மத்தியப் பிரதேசத்தில் ஆக்பர் பாதுஷாவின் சமாதியானது வெள்ளைஸ்படிகக் கற்களால் பூங்கொடி சித்திர அலங்காரங்கள் செய்து அமைக்கப்பட்டு "உனதுபெயர் விளங்கட்டும்" என்னும் கருத்துள்ள பதங்கள் அரபி பாஷையில் செதுக்கப்பட்டிருக்கிறது. தவிர கட்டடத்தின் சுவர்களில் குரான முதலியுவைகளிலிருந்து பலவாக்கியங்களை வெள்ளை ஸ்படிகக்கற்களில் செதுக்கி யிருக்கிறார்கள். இதேமாதிரி சமாதிமேல் மெத்தையின்பேரில் செய்து வெகு அலங்காரமாய் வைத்திருப்பதால் அங்கிலேயர் முதலிய அந்நிய தேசத்தவர்கள் தாராளமாய் வந்து பார்த்துக்கொண்டு போகிறார்கள். அடிபாகத்திலுள்ள சமாதி, மேல்பாகத்திலிருந்து படிகளின் வழியாய்க் கீழேயிறங்கி சுற்றிப்பார்ப்பவர்களுக்கு ஒரு குகையில் கட்டப்பட்டதுபோலத் தோன்றும். இந்த சமாதியைச் சுற்றி அவர் பந்துக்களுடைய சமாதிகள் பல காணப்படுகின்றன.

டாஜ்மஹால் (Taj Mahal.) இந்த ஆச்சரியமான கட்டடம் யமுனநதியின் வடகரையில் தேவேந்திர விமானம்போல் கட்டப்பட்டிருக்கிறது. இந்தக் கட்டடம் கட்டியிருக்கப்பட்ட பூமியானது 120-கஜ அகலமும் அதற்கு மூன்று மடங்கு அதாவது 360-கஜநீளமுமுள்ளது. இந்த விஸ்தீரணமுள்ள இடத்தைச் சுற்றி, பத்துப்-பதினைந்து அடி உயரமும் நான்கடி அகலமுமுள்ள மதிள்சுவர் கட்டப்பட்டிருக்கிறது. முந்திய புறத்தில் பட்டிப்பூர்கற்களால் ஒரு கோபுரத்துடன் கட்டப்பட்ட ஒருபெரும் தலைவாயில் விளங்குகிறது. சமசதுரமான விஸ்தீரணத்தில் பெரியவளைவுகள் வைத்தும், வெள்ளைப்பளிங்குக் கற்களால் 10அடி உயரமுள்ள ஸ்திரீ ரூபமான இரண்டு பிம்பங்கள் செய்து சாய்ந்தவாக்கில், முன்சொன்ன வளைவுகளுக்குமேல் அமைத்தும், மேலேயுள்ள கோபுரத்திற்குச் செல்ல ஒருபுறத்தில் படிகள் அமைத்தும், கீழ்புறத்திலுள்ள ஒரு அறையில் இந்த டாஜ் மஹால் சம்மந்தமான பிளான் பல வருஷங்களில் எடுக்கப்பட்ட 'போட்டோ' படங்கள், கட்டியவராகிய ஷாஜீஹான் பாதுஷாபடம், மும்டாஜி படம் முதலிய பல சாமான்களைவைத்து 'டாஜ் மியூசியம்' என்று பெயரிட்டிருக்கிறார்கள். இதற்குள் சற்று படித்தவர்களென்று தோற்றுகிறவர்களை மட்டும விடுகிறார்கள். இந்த வாயிலைக் கடந்து உட்சென்றால், இரண்டு வரிசையாக செல்லும் படி இரண்டடியகலமுள்ள, கல்களமைத்து, பாதையாகவும், இருபுறத்திலும் வரிசையாய் தண்ணீர்க்குழாய்களமைத்து, எப்பொழுதும் தண்ணீர் வாரி இரைத்து பாவனையாய் விழும்படி செய்து கீழே தண்ணீர், தொட்டிகளில் தேங்கும்படியாகவும், அத்தண்ணீர் இருபுறத்திலுமுள்ள சந்தனம், அகில், அசோகு, வாழை கமுகுமுதலிய மரங்களுக்கும் மல்லிகை இருவாக்ஷி, ஜாஜி முதலிய புஷ்பச் செடிகளுக்கும் பாயும்படி செய்திருக்கிறார்கள். இம்மாதிரி தண்ணீர்க் குழாய்களும், தொட்டிகளும் கல்

பாதைகளும் இந்த வாயிலிருந்து வைக்கப்பட்டிருப்பதைத் தவிர டாஜ் மஹால் என்ற ஆச்சரியமான கட்டடத்திலிருந்தும் வைக்கப்பட்டு மத்தியில் வெள்ளைக் கற்களாலேயே செய்யப்பட்ட ஒரு மேடையும் அம்மேடையின் நடுவே வெண்மை, சிவப்பு, மஞ்சள் முதலிய வர்ணமுள்ள மச்சங்கள் துள்ளிவிளையாடிக் கொண்டிருக்கிற ஒரு சிறிய தடாகமும், அதற்கு நான்கு புறத்திலும் உட்காரத் தகுந்த ஆசன மேடைகளும், இரவில் விளக்கு வைக்கத் தகுந்த லாந்தர் ஸ்தம்பங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இந்த மேடையிலிருந்து பார்த்தால் சுமார் 150-கஜ தூரத்தில் நாம் முன்கூறிய வாயிலும் அதற்கு எதிர்முகமாக 150-கஜ தூரத்தில் டாஜ்மஹாலும் மற்ற இருபுறத்திலும் 50-கஜ தூரத்தில் மதிள் சுவரை யொட்டி இரண்டு 'மஸ்ஜீதுகள்' என்று அழைக்கப்படுகிற சித்திராலங்காரமான கட்டடங்களும் காணப்படுகின்றன. இவைகள் பட்டிப்பூர் மலைக் கற்களேயன்றி மற்றப்படியன்று. இம்மாதிரி சற்று பெரியதான இரண்டு கட்டடங்கள் டாஜ் மஹாலின் இரு புறத்திலும் மதில் சுவரை யொட்டிக் கட்டப்பட்டிருக்கிறது. இக்கட்டடங்களுக்கு நடுநாயகமாக விளங்கும் டாஜ் மஹாலானது யமுனை நதியை நோக்கிய பாவனையாய் சுமார் 50, 60, அடி ஆழத்திலிருந்து பிர்மாண்டமான பலகைக் கற்களாலேயே அஸ்திவாரம் போட்டு தரை மட்டத்திற்கு மேல் 15 அடி உயரம் கட்டடம் கட்டி அதன் மேல் வெள்ளை ஸ்படிகக் கற்களையே பரப்பி சுமார் 200-அடி அகலமும் அதே அடி நீளமும் வைத்து மேடை செய்து, நான்கு புரத்திலும் 137-அடி உயரமுள்ள நான்கு மினரெட்ஸ்களென்னும் நீண்டகோபுரங்கள் வெள்ளை ஸ்படிகக் கற்களாலேயே கட்டி, உள்ளே வளைந்து சுற்றிச் செல்லும் படிகளமைத்து, மேல் உச்சியில் எட்டுஸ்படிகத் தூண்களால் வாழைப்பூ மாதிரி செய்த கோபுரங்களும் அவற்றின் மேல் பொன்முலாமிட்ட கலசங்களும் பிரகாசிக்கின்றன. இந்த மினரெட்ஸ்களுக்குள் வளைவுப்படிகள்வைத்து, போதுமான வெளிச்சம் வரும்படி அங்கங்கே பலகணிகள் வைத்திருக்கிறபடியால் யாவரும் பயமின்றி ஏறி டாஜ் மஹாலின் அழகையும், யமுனைநதியின் கம்பீரத்தையும், ஆக்ரா பட்டணத்தின் தோற்றத்தையும், கோட்டையின் அமைப்பையும் கண்டு ஆநந்தமடையலாம்.

இந்த நான்கு கோபுரங்களுக்கிடையில் 75-அடி நீளமும் 75 அடி அகலமும், 250-அடி உயரமும் கொண்டதாய், சுற்றியும் பன்னிரண்டு சிறிய ஸ்தூபிகளும், அவைகளுக்கு மத்தியில் நான்கு பெரிய வாழைப்பூ வடிவமான கோபுரங்களும், அவைகளுக்கு மத்தியில் ஆகாயத்தை யளாவும்படியாக பிர்மாண்டமான வளைவுகளுடன் கூடிய கோபுரமும், அந்த கோபுரங்களின்பேரில் பொன்முலாம் பூசிய கலசங்கள் ஒன்றுக்குமேலொன்றாய்ப் பிரகாசிக்கிற கோபுர உருண்டைகளின்பேரில் வரிசையாக பச்சை, சிவப்பு, நீலம் முதலிய நிறங்களோடுகூடிய தீபங்கள் ஏற்றியதுபோல், பதிப்பிக்கப்பட்ட கற்கள் ஜ்வலிக்க, சிற்ப சாஸ்திரமே சிரித்து 'சபாஷ்' என்று சொல்லும்படியாக உள்ளும் மேலும் ஒரே மாதிரியாக ஸ்படிகக் கற்களைக் கொண்டே, ஒட்டு இன்ன இடத்தில் என்பது தெரியாமலும், சாரங்கட்டியவிடம் தெரியாமலும், சுண்ணாம்பு, காரை மணல் முதலியவைகளை உபயோகப்படுத்தாமலும் கதவுகளுக்கன்றி மற்றவைகளுக்கு மரமென்றதை மருந்துக்கும் சேர்க்காமலும், வேண்டிய ஒவ்வொரு தூண், சட்டம், நிலை, பலகணிமுகப்பு முதலிய பாகங்களில் வெள்ளை ஸ்படிகக்கற்களையே செதுக்கி பச்சை, சிவப்பு, நீலம், மஞ்சள் முதலிய கற்களைப்பதித்து புஷ்பங்களோடுகூடிய கொடிகள் படர்ந்தமாதிரி செய்திருப்பதையும், ஸ்படிகக்கற்களையே குடைந்து செடி கொடியலங்காரங்கள் துளைச்சலினாலேயே யுண்டாகும்படி செய்திருப்பதையும், பார்த்தால் விஸ்வகர்மாவே வந்து கட்டிச் சென்றனரோ வென்று கூறும்படி தோற்றுகின்றது. உள்பாகம் பக்கத்திற்கு மூன்று அறை வீதம் எட்டு அறைகளோடும் மத்தியில் ஷாஜீஹான் பாதுஷாவுடையவும் அவர் அன்புக்குகந்த 'மும்டாஜி' என்னும் மனைவியுடையவும் சமாதிகளின் மேடைகள் அபூர்வமான ஸ்படிகக் கற்களால் செய்து சுற்றியும் சித்திரப்பூங்கொடி வேலைகள் செய்த வெள்ளைக் கற்களினாலேயே கைபிடிச்சுவர் அமைத்திருக்கிறது. சமாதிக் கற்கள் மேலும் சித்திர அலங்காரமாய் விலையுயர்ந்த கற்களினாலேயே பூங்கொடிவேலைகள் செய்திருக்கிறார்கள். இவை பார்வைக்கு

அலங்காரமாக விருந்தாலும் குரான் முதலிய புஸ்தகங்களிலிருந்து எடுத்தெழுதிய அக்ஷரங்கள் என்பதாகவும் கூறப்படுகிறது. 'மும்டாஜ்' சமாதியைவிட ஷாஜீஹான் சமாதி சற்று உயரத்தில் குறைந்தும், சித்திரவேலைப் பாடுகளில் கொஞ்சம் தாழ்ந்ததாகவே காணப்படுகிறது. இந்த சமாதியை, இதைச்சுற்றியுள்ள எட்டு அறைகளிலிருந்தும் பார்க்கும்படியாக வெகு சாதுரியமாய் பலவர்ணக் கண்டிகளமைத்த ஜன்னல்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. மேல்பாகத்தில் கோபுரமாக செய்து வளைக்கப்பட்டதால் நேர்ந்த உள்பக்கத்து வளைவுகளுக்கும் எவ்விதமாகவோ பல சித்திரங்களுண்டாகும்படியாக வேலைசெய்திருக்கிறார்கள். 200-அடி உயரமுள்ள இந்த கல்வளைவுகளில் சித்திர அலங்காரம் செய்திருப்பதைப் பார்க்க அற்புதமாகத்தோற்றுகிறது.

இந்த சமாதியின் அடிதளத்தில் உண்மையாக சமாதிசெய்யப்பட்ட இடமுண்டு. மேலே செய்திருக்கிற மாதிரியாகவே மேடைகள் செய்து ஸ்படிகக்கற்களாலேயே மூடியிருக்கிறார்கள். இந்த அடிதளத்திற்கு சென்று பார்க்க இஷ்டப்படுகிறவர்களை மட்டும் ஒரு லாந்தர் வெளிச்சத்துடன் கூட்டிக்கொண்டுபோய்க் காட்டுகிறார்கள். இந்த பாகமும் வெள்ளை ஸ்படிகக் கற்களாலேயே கட்டப்பட்டு அதிக பரிசுத்தமாகவே வைக்கப்பட்டிருக்கிறது. இந்த சமாதிகளும் 'டாஜ் மஹால்' என்ற ஆச்சரியமான கட்டடமும், மினரெட்ஸ்கள் என்ற கம்பங்களும் பல்லாயிரக்கணக்கான ஸ்படிகக்கற்களால் கட்டப்பட்டதாயிருந்தாலும், அக்கற்களை அறுத்து நயப்படுத்திய விதமும், குடையவேண்டிய இடங்களில் குடைந்தெடுத்த விதமும், பொறுத்துகள் தெரியாமல் பொறுத்தப்பட்ட விதமும், அக்கற்களின்பேரில் கொடிகளும் புஷ்பங்களும் அமைய சித்திர அலங்கார விநோதமாக, பலவர்ணக் கற்களைப் பதித்த மாதிரியும், உள்ளும் புறமும் ஒரேமாதிரியாக அமையும்படி கட்டியிருக்கிற திறமையையும் என்னவென்று சொல்வது! யோஜித்தால் மூளை சிதறுமேயன்றி புத்திக்கு ஒன்றும் எட்டுகிறதில்லை. அம்மாதிரி 10-அடி நீளமும் அகலமுமுள்ள ஒரு கட்டடம் கட்டுவதென்றாலும் இலக்ஷக் கணக்கான திரவியமும், அனேக வருஷ உழைப்பும்வேண்டுமே!

இந்தக் கட்டடத்தை ஷாஜீஹான் தனது அன்புள்ள மனைவி ஜெகத்ஜோதி என்ற மாதின் வேண்டுகோள்கைக் கிசைந்து இருபத்திரண்டு வருஷகாலம் இரவு பகல் என்ற வித்தியாசமின்றி, இருபது லக்ஷம் ஜனங்களை வேலைக்கு நியமித்து இருபது கோடி பூவராகனைச் செலவழித்து, தனது இதரவேலைகளை தகுந்தவர்களைப் பார்க்கும்படி ஒப்புவித்து, தானே கண்ணும் கருத்துமாயிருந்து செய்துவத்ததாகத் தெரியவருகிறது. இதைக்கட்டுவதற்கு முன் துர்க்கிஸ்தானம், கான்ஸ்டாண்டிநோபில் முதலிய விடங்களிலிருந்தும் பல விதமான பிளான்களை வரவழைத்துப் பார்த்ததாகவும், கடைசியில் இத்தேச சிற்பியொருவரால் தயார் செய்யப்பட்ட பிளான் பிரகாரமே இந்தக்களைக் கொண்டே இதைக் கட்டியதாகவும் தெரியவருகிறது. உலகத்திலுள்ள ஏழு ஆச்சரியங்களில் ஒன்று என்பதாகக் கொண்டாடப்படுகிற இந்த அற்புதமான கட்டடத்தை நேரில் கண்டவர்களுக்கு அதன் அருமை பெருமை தெரியுமேயன்றி ஒரு வியாசத்தில் எழுதுவது முடியாத காரியமே. இந்த டாஜ் கட்டடத்திற்கு வடபுறத்திலும் தென்புறத்திலும் இப்பொழுது சிங்காரவனம் செய்து அநேக செடிகொடிகளையும் பல விருக்ஷங்களையும் வைத்து பயிர் செய்திருக்கிறார்கள். தவிர இந்த டாஜ்மஹாலையடுத்து பூர்வத்தில் கட்டப்பட்ட பலவீடுகளும், மாளிகைகளும் காணப்படுகின்றன. இவைகளெல்லாம் பட்டிப்பூர் கற்களாய் கட்டப்பட்டவைகளே. மேற்கூறிய சிங்காரவனத்தில் நமது காருண்ணிய விக்டோரியா சக்கிரவர்த்தியின் சிலையொன்று நூதனமாய் நாட்டியிருக்கிறார்கள். தவிர இந்த சிங்காரவனத்திற்குள் பந்தாடும் மேடைகளும் சில போடப்பட்டிருக்கின்றன.

இதையன்றி யமுனைநதிக்கு அக்கரையில் இராமபாக் என்பதாக ஒரு சிங்காரவனமிருக்கிறது. இது முன்னொரு காலத்தில் அதிக சிரேஷ்டமான சிங்காரவனமாயிருந்து இப்பொழுது சீர்கெட்ட ஸ்திதியிலிருக்கிறது. இந்தத் தோட்டத்தைப் பார்க்கச் செல்லுகிறவர்கள் யமுனையாற்று பாலத்தைக் கடந்து செல்ல வேண்டும்.

ஜிம்மா மசீத்:—இதுவும் பட்டிப்பூர் கற்களால் கட்டப்பட்ட பெரிய கட்டடம். ஆக்ரா

ரட்டை-ரயில்ஸ்டேஷனை யடுத்திருக்கிறது. இந்த மசீதின் மேல்பாகத்தில் சிலஸ்தூபிகள் அதிக உயரமாய் கட்டப்பட்டிருப்பதுடன் மேல்பாகத்தில் ஆறுகால் மண்டபம்போலவும் எட்டுக்கால் மண்டபம்போலவும் பல கல்மண்டபங்கள் செய்து வரிசையாய் அமைத்திருக்கிறார்கள். இவைகள் பார்வைக்கு அதிக அந்தமானவைகள். உள்பாகத்தில் சுமார் ஆயிரம் பேர் உட்காரக்கூடிய ஒரு கூடம் (Hall) இருக்கிறது. இப்பொழுது இந்தக் கட்டடத்தின் சில பாகங்கள் இடிந்து கிடக்கின்றன.

இவைகளன்றி பட்டிப்பூர் என்ற கிராமத்தில் ஆக்பர் பாதுஷா ஒரு அழகான மஸ்ஜீத்தும் தமது மூன்று மனைவிகளும் சுகமாய் வசிக்க ஒரு அலங்காரமான அரண்மனையும் கட்டியிருக்கின்றனர். இவைகளும் பார்க்கத் தக்கவைகளே. இந்த கிராமம் ஆக்ராபட்டணத்திலிருந்து 16மைல் தூரத்திலிருக்கிறது. இது ஆக்பருக்கு அதிக பிரியமான விடமென்பதாகத் தெரியவருகிறது.

மேற்கூறிய கட்டடங்கள் ஒவ்வொன்றையும் யாதொரு கட்டணமுமின்றிப் போய்ப்பார்க்கலாம். கோட்டைக்குள் சென்று பார்க்கப் பிரியமுள்ளவர்கள் ஆள் 1-க்கு ஒரு அணா வீதம் கொடுத்து டிக்கட்டுகள் பெறவேண்டும். இதற்கு முந்திய தினத்திலேயே விண்ணப்பம் செய்யவேண்டும். இந்த பூர்வீகமான கட்டடங்களின்றி நமது அங்கிலேயே கவர்ன்மெண்டார் காலத்தில் கட்டப்பட்ட கட்டடங்களில் பார்க்கத்தக்கவைகளும் சிலவுள. அவைகளில் முக்கியமானவை 'மெட்காப் ஞாபக சின்னம்' என்ற கட்டடம், ஆக்ராகாலேஜ், லெப்டினெண்டு கவர்னர் மாளிகை, 'பாங்கி' முதலியவைகளே. இதில் மெட்காப் ஞாபக சின்னம் சர்க்கஸ், ஆட்டம், பிரசங்கம் முதலியவைகள் செய்யத்தகுந்த பெரிய ஹாலுடன்கூடிய கட்டடம்.

யாம் இந்நகரத்திலுள்ள டாஜ்மஹாலைப் பார்க்க வேண்டுமென்ற பேரவாவினால் இந்நகரையடைந்து மூன்று நாள் தினமும் மேற்படி டாஜ்ஜைப் பார்த்தும் திருப்தியடையாமல் மறுபடியும் இரண்டு நாள் தங்கி ஒரு நாள் இரவு நிலா வெளிச்சத்திலும் மற்றொரு நாள் யமுனையின் எதிர்க்கரைசென்று பார்த்தும், திருப்தியடையாமல் மறுபடியும் ஒரு தடவை சென்று பா...த்துத் திரும்பினோம்.

## CHILDREN'S PAGE.

### THE MONKEY AND THE CHILD.

## சிறுவர்க்கான பக்கம்.

### குரங்கும் குழந்தையும்.

சிறுவர்களே! இவ்விசை "குரங்கும்குழந்தையும்" என்று ஒரு சிறுகதை சொல்கிறேன் கேளுங்கள். கதையென்றால் கட்டுக்கதையல்ல, உண்மையாக நடந்ததே. நடந்ததைப் பார்த்தவர் சொல்லக்கேட்டு எழுதியதையே உங்களுக்கு நான்சொல்லுகிறேன். யானை அறிவிலும் விவேகத்திலும் மிகச்சிறந்த பிராணியானால், குரங்கு உருவத்திலும் சேஷ்டையிலும், மனுஷனுக்கு மிகவும் நெருங்கிய பொருத்தமுள்ளதன்றி, மனுஷனைப்போல் நடிப்பதிலும் மற்ற எல்லாப் பிராணிகளையும்விட மனுஷனை யொத்ததாக விருக்கிறது. நம்மில் சாமானியர்களும் இதை யுணர்ந்திருக்கிறார்களென்பதற்கு உதாரணம் வேண்டின், வாலில்லாக்குரங்கைப்பார்த்த சாமானியர்கள், அதற்குக் "காட்டுமனுஷன்" என்று பெயரிட்டிருப்பது ஒன்றேபோதும். இது நிற்க.

ஜெமெய்க்கா தீவிலிருந்து இங்கிலாந்துக்குப் போன கப்பலொன்றில் ஏறிச்சென்ற பிரயாணிகளில் வெள்ளைக்கார துரைசானி ஒருவரிருந்தார். அந்தம்மாள் இரண்டொரு மாசமான தன் கைக்குழந்தையோடு கப்பலேறி தன் சுதேசமாகிய இங்கிலாந்துக்குப் பிரயாணமாய்ப் போய்கொண்டிருந்தார். கப்பலில் போகும் பிரயாணிகள் வெகுநாளைக்கு நிலத்தைக் காணாமல் சமுத்திரமத்தியில் கப்பலிலேயிருந்து வசித்துவரவேண்டியது அவசியமாதலால், பிரயாணிகள் ஏற்றிக்கொண்டுபோவதற்கான கப்பல்கள், அநேக ஜனங்கள் வெகுநாள் குடியிருப்பதற்குவேண்டிய வசதிகளும் சாதனசௌகரியங்களும் பொருந்தினவைகளாகக் கட்டப்பட்டிருக்கும், தளமும், மட்டும், சமையலறையும், ஸ்நான அறையும், தூங்குமறையும், போஜனகூடமும், உலாத்த மேல் தட்டும் கீழ்தட்டுமாக, பெரிய அடுக்கு மெத்தைவீடுபோல் திவ்வியமாய்க் கட்டப்பட்டிருக்கும். ஆடுமாடுகள் கட்டுவதற்குத் தொழுவமும்கூட அமைந்திருக்கும். சாயங்காலம்காற்று வாங்க பிரயாணிகள் மேல்தட்டில் வந்து உலாத்துவதும் கூடிக்குலாவுவதும், சமுத்திரத்தில் போகும் இதர கப்பல்களையும் மற்றப்படி கப்பலிலிருந்து காணக்கூடும் காக்ஷிகளையும்

பார்த்துச் சந்தோஷமனுபவிப்பதுமாக விருப்பார்கள். இப்படியிருக்குங் காலத்தில் ஒரு நாட் சாயங்காலம் அந்தத் துரைசானி தன் கைக்குழந்தையுடன் மேல்தட்டிற்கு வந்து ஒரு 'சோபா'வில் உட்கார்ந்து காற்றுவாங்கிக் கொண்டிருந்தாள்.

அப்பொழுது அக்கப்பற்றலைவன் தூரத்தில் போகும் கப்பலொன்றைத் தன் தூரதிருஷ்டிக் கண்ணாடியால் கண்டு, அது அவ்வளவு தூரத்திலிருந்து பார்க்க மனதுக்கு ரமணீயமாகவிருந்ததால், பக்கத்திலுட்கார்ந்திருந்த அத்துரைசானியைக்கூப்பிட்டு அவருக்கு அக்காக்ஷியைக் காட்ட நினைத்தான். அத்துரைசானியும் அக்காக்ஷியைக் காணவிரும்பி, குழந்தையைச் சோபாவில் படுக்கவிட்டு, கப்பற்றலைவன் தூரதிருஷ்டக் கண்ணாடியைச் சரிப்படுத்தி அவர் அக்காக்ஷியை நன்றாகக்காணும்படி வைத்துக்கொடுக்க, இவர் அது மூலமாகப் பார்க்கத் துவக்கினார். அப்பொழுது சுங்கானிலிருந்தமனிதன் "அதோப்பார், அந்தக்குரங்கு—" என்று மனம்பதறக்கூவினன். அவன் சொல்லி முடிக்குமுன் திரும்பிப் பார்த்தார்கள். அக்கப்பலிலிருந்த பெருங்குரங்கு ஒன்று ஒரு கையால் குழந்தையை யெடுத்து உறுதியாயணைத்துப் பிடித்துக்கொண்டு இன்னொரு கையால்பாய்மரத்தின்மேலேறிக்கொண்டிருந்தது. அதைப் பார்க்கவும் தாய் பிரமை கொண்டு மூர்ச்சித்துப் போய்விட்டாள். கப்பற்றலைவன் இன்ன செய்வதென்று தெரியாது திகைத்து நின்றான். அக்குரங்கு வளர்ப்புக் குரங்காதலால் குழந்தையைக் கெட்ட எண்ணத்தோடு எடுத்துக்கொண்டு போகவில்லையென்று அவருக்குத் தெரியும். ஆனாலும், பாய்மரத்தின் நுனியில் குழந்தையை யெடுத்துக்கொண்டுபோய் உட்கார்ந்து கொண்டிருக்கும் குரங்கினிடத்தில் குழந்தையை விட்டு விட்டுப் பார்த்திருக்க யாருக்குத்தான் மனம் பொறுக்கும். கப்பற் சேவகரைப் பாய்மரத்தின் மேலேறிச்சென்று குரங்கைப்பிடித்துக் குழந்தையை வாங்கிக் கொண்டு வரும்படி அனுப்பலாமென்றால் அது ஆபத்தாகமுடியும். மனுஷன் தன்னைப்பிடிக்க வருவதைக்கண்டால் குரங்கு குழந்தையைப் போட்டுவிட்டு ஒரு பாய்மரத்திலிருந்து மற்றொரு பாய்மரத்துக்குத் தாவித் தப்பப்பார்க்கும். ஆகையால் ஒன்றும் செய்யத்தோன்றா

மல், காப்ராவும் செய்யாமல் சற்றுநேரம்
பார்த்துக்கொண்டிருந்தார்கள். பாய்மரத்தி
மேலேறிய குரங்கு வசதியான ஒரு இடத்திலு
கார்ந்துகொண்டு குழந்தையைத் தாயார் ம
யில் வைத்துக்கொள்கிறமாதிரி மாரோடணை
துக் கையில் வைத்துக்கொண்டு ஒரு கையா
அதைத் தடவிக்கொடுத்துச் சீராட்டித் தா
ட்டி அழுதுகொண்டிருந்த குழந்தையை சா
தானப்படுத்தித் தூங்கவைக்கவும் முயற்சி
த்தது. களை நீங்கிப் பிரக்ஞைபெற்ற தாய
பாய்மரத்தின் உச்சியில் தன் குழந்தையிரு
பதைக் கண்டு மனம் பதறக் கதறுகிறு
அவள் மனம்பதறிக் கதறுவதைப் பார்த்து
சகிப்பது கஷ்டமாயிருந்தது. குழந்தை
வாங்கச் செய்யக்கூடியதோ இன்னதென்
தோன்றவில்லை. இந்தசமயத்தில்கப்பற்றலைவ
எல்லாரையும் கப்பல் தட்டைவிட்டுக் கீ
போகும்படிச் செய்து தானும் ஒரு இடத்தி
ஒளிந்துகொண்டு சத்தம் சந்தடியின்றி மே
தட்டை ஒழித்துவிட்டு வெகு ஆவலோ
பார்த்திருந்தான். கீழே மனுஷர் ஒருவருமி
லாததுகண்டு குரங்கு தானாகக் குழந்தை
உறுதியாக ஒரு கையால் அணைத்துக்கொண்
ஜாக்கிருதையாகக் கீழே இறங்கிவந்து குழ
தையை முன்போல் சோபாவின்மேல் மெ
வாய் வைத்துவிட்டுப் போய்விட்டது. அ
பொழுது குழந்தை யுடம்பு ஜில்லிட்டு வெ
வெடுப்பாய் அழுதுகொண்டிருந்தது. இதோ
கொஞ்சம் பயந்துகொண்டுமிருந்திருக்கலா
மற்றப்படி அதற்கு ஒரு தீங்கும் நேரிடவில்லை
தன் குழந்தையை உயிரோடு ஒரு தீங்குமின்
மறுபடியும் தன் கையிலெடுத்து அணைத்து
கொள்ளும்படியான பாக்கியம் பெற்ற அத்
யின் மனச்சந்தோஷத்தையும் நன்றியறித
யும் சொல்லமுடியாது. என் அருமைச் சி
வர்களே உங்களில் யாராவது திருநாட்கடை
தேர்க்கடையில் உங்கள் தாயாரை விட்டு
பிரிந்துபோய் அப்புறம் அகப்பட்டிருந்தா
அப்பொழுது உங்களை அம்மாள் வாரியெடுத்
கட்டியணைத்து முத்தமிட்டு முகர்ந்து சந்தோ
ஷம் பொங்கி அழுதது உங்கள் ஞாபகத்தி
லிருக்குமே. அப்படியிருந்தால் அதை அ
குழந்தையின் தாய் பட்ட சந்தோஷத்தை
குறிப்பிட உங்களுக்கு ஒரு அடையாளமாக
சொன்னேன். அதன் உண்மையை அனுபவ
தில் உணர்ந்தால் அறியலாமேயன்றி வாயினா
சொல்லியுணர்த்துவது சாத்தியமல்ல.